உ
கணபதிதுணை.
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.



# சிவக்ஷேத்திரவிளக்கம்.

திருவண்ணாமலை
அண்ணாமலைத்தேசிகர்
சிவஸ்தலயாத்திரைசெய்து
அறிந்தவாறு இயற்றியது.
இஃது
வேதாரணியம்
அட்டங்கன்முறைக்
கணபதி தேசிகரவர்கள் வைத்திருந்த
கையெழுத்துப்பிரதியைக்கொண்டு
சில வித்துவான்களாற் பரிசோதிப்பித்து
மதுரைச்சில்லாவைச்சேர்ந்த
பள்ளத்தூரிலிருக்கும்
சொ - மு-ரு-ம-
இராமஞ்செட்டியாரவர்கள் குமாரர்
சோலையப்ப செட்டியாரவர்கள்
கேட்டுக்கொண்டதின்பேரில்
காரைக்காலி லிருக்கும்
அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

சித்திரபானுவரு-கும்பமீ. 1882

உ

சிவமயம்.

ஸ்ரீ வேதாகமசித்தாந்த சைவசமையம் விளங்கும் பொருட்டு யாழ்ப்பாணத்து நல்லூரில் திருவருளாலவதரித்தவரும் சிவானுபவச் செல்வருமாகிய ஸ்ரீ-லி-ஸ்ரீ ஆறுமுகநாவலரவர்களியற்றிய சைவசமையநூல்களிலொன்றாகிய சிவாலய தரிசனவிதியும் இச்சிவக்ஷேத்திரவிளக்குமும் நன்குணர்ந்து அம்முறையே யொழுகுவோர்சிவபெருமானதிருவடி நிழலில்வாழ்பவராவர்

தாயுமான சுவாமிகள் அருளிச் செய்த பாடல்

மூர்த்தி தலந்தீர்த்த முறையாத் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும்வாய்க்கும் பராபரமே

இதனாலுணர்க.

இப்புத்தகம் வேண்டியவர்கள், காரைக்காலில்-சிமு-வெ-வெ-வீட்டிலும், நாகை - வெளிப்பாளயத்தில் மு-ரு-ம-பு-வீட்டிலும், கொழும்பில் - சொ.மு-ரு-ம வீட்டிலும், சரசமான விலைக்குப பெற்றுக் கொள்ளலாம.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவக்ஷேத்திரவிளக்கம்.

காப்பு.

கணபதிதுதி.

(நேரிசைவெண்பா.)

ஒன்றாதியோரெழுபத் தொன்றீராய்மூவர்தமிழ்ச்
சென்றார் சிவதலங்கள் செப்புதற்கு—நின்று
கடகுஞ்சரமுகனேர் காய்விழியா னீன்ற
கடக்குஞ் சரமுகனே காப்பு.

சபாபதி துதி.

ஆதிநடு வந்தமிலா வளவில்சோதி
யருண்ஞான மூர்த்தியா யகிலமீன்ற
மாதினையு மொருபாகத் தடக்கிவானோர்
மகுடசூடாமணியாய் வையம்போற்றப்
பாதிமதியணிபவளச் சடைகடாழப்
படரொளியம் பலத்தாடும் பரனார்பாதத்
தாதுமலி தாமரைகள் சிரத்தேவைத்துத்
தளராத பேரன்பு வளராநிற்பாம்.

உமாமகேஸ்வரிதுதி.

ஈசனருளிச்சையறி வியற்றலின்ப
மிலயமொடு போகமதி காரமாகித்
தேசருவ மருவுருவ முருவமாகித்
தேவியுமாய்த் தேசமொடு செல்வமாகிப்
பேசரிய வுயிரையெலாம் பெற்றுநோக்கிப்
பெரும்போக மவையளித்துப்பிறப்பினையு மொழித்தி [ட்
டாசகனு மடியருளத் தப்பனுட னிருக்கும்
அன்னையருட் பாதமலர் சென்னிவைப்பாம்.

கந்தசாமி துதி.

அருமறையா கமமங்க மருங்கலைநா றெரிந்த
வகத்தியனுக் கோத்துரைக்கு மருட்குருவாங்குருவை
திருமறைமா முனிவர்முனி தேவர்கடந் தேவன்
சிவனருள்சேர் திருமதலை தவநிலையோர்தெய்வம்
பொருமறையார் கழல்வீரர் வீரன்கையிற்
பூநீர்கொண் டோவாது போற்றுமடி யவர்கள்
கருமறையா வகையருளிக் கதிவழங்குங்கந்தன்
கழலிணைக ளென்சிரத்திற் கருத்தில்வைப்பாம்.

நால்வர் துதி.

ஞானத்தாய் திருமுலைப்பா னன்கயின்ற மறைக்கொழுந்தை நலிகற்றூணும்
பீனத்தாற்கடலகடந்த பெருந்தகையை யிடங்கரின்வாய்ப் பிள்ளையீய்ந்த
தானத்தான் றனைநரியைப் பரியாக்குஞ் சித்தனைத்தன் றனிநாவரச
மோனத்தாம்பாசுரங்கண் மொழிந்துயர்ந்தமாமணியை முன்னிவாழ்வாம்.

அறுபத்துமூவர் துதி.

அத்திமான்கலைமா னைந்தருநிழன்மா
னயில்விழிக் கஞ்சன மமைத்த
புத்திமானென்றே கவேடையாளம்
பொறித்தகந்தாமுள பெம்மான்
சத்திமான்காழித் தடவரையம்மான்
றன்னடிநீழலை யடைந்த
முத்திமானன வோராறுபத்து
மூவர்தாள் சிரமிசை முடிப்பாம்.

———





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவக்ஷேத்திர விளக்கம்,

---

## தேவாரத்திருப்பதிகமுள்ள சிவஸ்தலங்கள்.

ஈண்டுபுகழ்ச்சோணாட்டிலொருநூற்றுத் தொண்ணூறீ ழத்திரண்டு, பாண்டியிலீரேழ்மலைநாட் டொன்றுகொங்கே ழ்மகதமிருபத்திரண்டு, பூண்டதொண்டைநன்னாட் டெண் ணான்கு துளுவொன்று வடபுலத்தைந்தாக, வாண்டசிவஸ்த ல மிருநூற் றெழுபத்து நான்கு தொகை யாகுமன்றே.

திருச்சிற்றம்பலம்.

### திருப்பதிககோவை.

எண்சீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

கோயிறிருவ்வட்களமலைவாயிலகழிப்பாலை
குலவுபெருமண மயேந்திரப்பள்ளிமுல்லை
வாயிலகலிககாமூர் சாய்க்காடுதிருப்பல்ல
வனீச்சரம்வெண்காடு வளர்திருக்காட்டுப்பள்ளி
தாயிலான்குறுகாவூர் காழிகோலக்கா
தருக்கிளர்புள்ளிருக்கும் வேளூர்கண்ணார்கோயில்
ஞாயிலெயில்சடை முடியே நின்றியூர்புன்கூர்
நாடியநீடூரன்னியூர் வேள்விக்குடியே. (க)

கருத்தெதிர்கொள்பாடி மணஞ்சேரிதிருக்கொறுக்கை
கருப்பறியலூர்சதியே காட்டுகுரக்குக்கா
மருவும்வாள் கொளிபுத்தூர் மண்ணிபடிக்கரையே
வளர்திருவோமாம்புலியூர் கானாட்டுமுள்ளூர்
திருநாரையூர் கடம்பூர் பந்தணநல்லூர்பொன்
றிகழ்கஞ்ச னூர்கோடிகா மங்கலக்குடியே
திருப்பனந்தாளாப்பாடி சேய்ஞலூர்திருந்து
தேவன்குடிதிருவியலூர் திருக்கொட்டையூரே. (உ)

இன்னம்பர் திருப்புறம்பியம்விசயமங்கை
இயல்வைகாவூர்நல் வடகுரங்காடுதுறையே
பின்னமறுபழனமை யாறிருநெய்த்தானம்
பெரும்புலியூர்மழபாடி திருப்பழுவூர்கானூர்
அன்னவன்பிலாலந் துறைமாந்துறை பாற்றுறையே
யானைக்காபஞ்ஞீலி பாச்சிலாச்சிராமம்
மன்னுமீய்ங்கோய்மலையி னோடறுபான்மூன்றே
வடகரையிற்பதிதென்பால் வாட்போக்கியாமே. (௩)
கடம்பந்துறைபராய்த் துறைக்கற்குடிமூக்கீச்சரமுங்
கருதுதிரிச்சிராப்பள்ளி திருவெறும்பியூரே
நெடுங்களமேலைக்காட்டுப் பள்ளியாலம்பொழில்சீர்
நிகழ்திருப்பூந்துருத்தி கண்டியூர்சோற்றுத்துறைமா
லதிவேதிகுடிதென் குடிதிட்டைப் புள்ளமங்கை
யணியார்சக்கரப்பள்ளி யருங்கருகாவூரே
படர்பாலைத்துறை நலூர்திருவாவூரதனிற்
பசுபதீச்சரஞ்சத்தி முற்றம்பட்டீச்சரமே. (௪)
ஆறைவடதளிதிருவலஞ் சுழியல்குடமூக்
கதிற்கீழ்க்கோட்டங் காரோணம்பகீச்சரமே
கூறுமிடைமருதுகுரங் காடுதுறைநீலக்
குடிவைகன்மாடக் கோயினல்லங் கோழம்பம்
சீர்றயராவடுதுறைவன் றுருத்திதிருவழுந்தூர்
சகம்புகழ்மாயூரம் விளநகர்பறியலூரே
வீறுசெம்பொன்பள்ளி நனிபள்ளி வலம்புரமே
வியன்றலைச்சங் காடாக்கூர்விளங்கு கடவூரே. (௫)
திருக்கடவூர்மயானமொடு திருவேட்டகுடியே
தெளிச்சேரிதருமபுரம் நள்ளாறுகோட்டா
றுரைக்குமன்பர்பெருந் திருக்கோயின் மாகாளம்
முயர்மீயச்சூரிளங்கோயிற் றிலதைப்பதிபூ
மருக்கமழ்பாம்புர நற்சிறுகுடிவீழிமிழலை
வன்னியூர்கருவிலிமன் பேணுபெருந்துறையென்
கருத்தடைக்குநறையூர்ச் சித்தீச்சரந் தேடரிசிற்
கரைப்புத்தூர் சிவபுரங் கலயநல்லூர் தானே. (௬)

கருக்குடிவாஞ்சியந் திருநன்னிலத்துப்பெருங்கோயில்
கருதுகொண்டீச்சரம் பனையூர் விற்குடி தென்புகலூர்
இருக்கும் வர்த்தமானீச்சரமிராம நந்திச்சரமே
யியல்பயற்றூர் செங் காட்டங்குடிமருகலிருளா
முருக்கு திருச்சாத்தமங்கை நாகைக்காரோண
முன்றி றிருச் சிக்க றிருக்கீழ்வேளூர் தேவூ
ரரிக்கரியான் பள்ளியின் முக்கூட றிருவாரூ
ரறநெறி மூலட்டானம் பரவையுண்மண்டளியே. (எ)

மேலாரும் விளமர் கரைவீரம்பெருவேளூர்
மிளிர்தலையாலங்காடு குடவாயில்சேறை
நாலூர் மயானங் கடுவாய்க் கரைப் புத்தூரே
நவிலுமிரும்பூளை திருவரதைப்பெரும்பாழி
மாலூரு மவளிவ ணல்லூர் பருதிநியமம்
வாழ்வெண்ணிப் பூவனூர் பாதாளேச் சரஞ்சீர்ச்
சேலூருந் திருக்களர் சிற்றேமமுசாத்தானந்
திருவிடும்பாவனத்தோடு சேர்ந்தகடிக்குளமே. (அ)

தண்டலைநீணெறி கோட்டூர் வெண்டுறையோடழகே
தருகொள்ளம்பூதூர் பேரெயில் கொள்ளிக்காடு
கண்டருதெங்கூர் நெல்லிக்கா நாட்டியத்தான்குடியே
காராயில் கன்றாப்பூர் வலிவலங்கச்சினத்தோ
டண்டர் பிரான்கோளிலிதென் றிருவாய்மூர்மறைகா
டகத்தியான் பள்ளிகோடிக் குழகருந்தென்கரையில்
எண்டருநாற்றிருபத்தே ழிப்பா லீழத்தி
லிசைகோண மாமலை கேதிச்சரமென் றிரண்டே. (௯)

ஆலவா யாப்பனூர் பரங்குன் றேடகத்தோ
டருங்கொடுங் குன்றந் திருப்புத்தூர் புனவாயிலினோ
டேலுமிராமீச்சர மாடானை கானப்பே
ரெழிறிருப்பூவணஞ் சுழியலின்புறகுற்றாலம்
பாலலோசனன் றிருநெல்வேலி யொடும்பாண்டி
பதிநான்கு மலைநாட்டி லஞ்சைக்களமொன்றே

சிலமிகுமவிகாசி திருமுருகன்பூண்டி
திருநணுக்கொடிமாடச் செங்குன்றூர்தானே. (௪௦)

வெஞ்சமாக் கூடல் கொடுமுடி கருவூர் கொங்கின்
மேவுமே ழறந்துறை வெண்ணேய்காவணமாடம்
எஞ்சலில் கூடலையாற்றூ ரெருக்கத்தம்புலியூ
ரிணையசலுந் தினைநகர் சோபுரமதிக புகழே
விஞ்சதிருகாவலூர் முதுகுன்றந் திருநெல்
வெண்ணை திருககோவலூ ரறையணிநல் லூரே
மஞ்சுதிகழிடையாறு வெண்ணைநல்லூர் துறையூர்
வடகூர் வீடேயருளுந் திருமாணிக்குழியே. (௪௪)

தண்ணூர்தண்டலைப் பாதிரிப்புலியூர் முண்டீச்
சரம் புரவார்பனங்காட்டூர் திருவாமாத்தூரே
எண்ணூரண்ணாமலைபு நந்நாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பா லேகம்ப மேற்றளிவின்
கண்ணேங்கு மதிளோண காந்தன் றளியனேக
தங்காவதங் கச்சிநெறிக் காரைக்காடே
உண்ணுமேகுரங்கணின் முட்டந் திருமாகறலோத்
தூர் வன்பார்த்தான் பனங்காட்டூர் வல்லமாற்பேறே.()

ஊற விலம்பயங் கோட்டூர் விற்கோல மாலங்கா
டேர்பாசூர் வெண்பாக்கங் கள்ளிற் காளத்தி
மாறிருவொற்றியூர் வலிதாயம் பாலி
வடமுல்லைவாயில் வேற்காடு மயிலாப்பூர்
ஈறிலாவான்மியூர் கச்சூராலககோயி
லிடைச்சுரமுங் கழுக்குன்ற மச்சிறுபாக்கம்மே
மாறில்புகழ் வக்கரையயோ டரிசிலிதொல்விரும்பை
மாகாளந்தொண்டைநாட் டெண்ணிஞ்முப்பானிரண்
டே. ௪௩

சோகன்னந் துளுவதேயத்திலொன் றேயிப்பாற்
குலவுபருப்பத நீலப்பருப்பத மம்பிலைகதன்

பாகரனேகதங்காவதந் திருக்கேதாரம்
பகர்நொடித் தான்மலை வடக்கிற்பதியைந் தோடிவை
டாகவிருநூற்றெழுபானான் கென்பழுவ [யோ
ரருட்பதிகமிருக்குமூ ரதிகமாம்வைப்புத்
தாசமுடன்றுதிப்போர்க்கு நினைப்போர்க்கும் வினைகள்
சாராவாம் பிறப்பகலுஞ் சத்திய முத்தியுமே, கசு

திருப்பதிக்கோவை முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

திருப்பதிகக்கோவை.

ஷ விருத்தம்.

பன்னுசிவதல மொருநூற்றைம்பதிற்று மூன்று
பதிகமொன்றுநாற்பத்தொன்பதிற்பதிக மிரண்டா
முன்னுமிருபானெட்டு நகர்பதிகமூன்று
மொருபதினோர் தலங்களுக்கு மொருநான்கென்றுணர்க
மன்னுமிருநான்கு தலமோரைந்தேபதிக
மற்றுமைந்துதலங்களுக்கு வரும்பதிகமாறும்
பின்னுமைந்துவளநகர்க்குப்பெறும் பதிகமேழாம்
பெயர்த்து மொரு நான்குதலம் பெறும்பதிகமெட்டே
பரவுமொருநான்கு தலம் பதினொன்றும் பதிகம்
பன்னுமிருதலம்பதிகம் பன்னிரண்டாய்ப்பகரு
முனைசெயிருதலம் பதிகம் பதினெட்டாமிப்பா
லொருமூன்றுதலங்களுக்கு முறும்பதிகமுறைக்கி
னிரவிவருமறுநான்கு முப்பதிற்றுநான்கு
நீடெழுபத்தொன்றுமென நிரைநிரையுமாகக்
கருதுசிவதலமிருநூற் றெழுபத்தினான்கின்
கடைக்காப்பே ரெழுநூற்றுநாற்பத்தொன்பானே (உ)
திருப்பழுவூர்சேய்ஞலூர் திருமுல்லைவாயி
றிருவைகாகொடிமாடச் செங்குன்றூர் வியலூர்

கருக்குடிதெங்கூர் பனந்தாட் கலிக்காமூர்தலைச்சங்
காடு மயேந்திரப்பள்ளி கச்சினங்கன்றாப்பூர்
குரக்குக்கா பெரும்புலியூர் திருக்காட்டுப்பள்ளி
குடந்தைக் கீழ்க்கோட்டமொடு குடந்தைக்காரோண
மெருககத்தம்புலியூர் வெண்டுறைநன்னூர்கோயி
விலம்பயங்கோட்டூர் சிக்கலிராமநந்தீச்சரமே. (௩)

பள்ளியின்முக்கூட திருவிரும்பூளையாலூர்ப்
பசுபதிச்சரம் பாலைத்துறை பருதிநியமங்
கள்ளில்குரங்கணின் முட்டந் திருமுருகன்பூண்டி
சஞ்சனூர் கச்சிநெறிக்காரைக்கா டோத்தூர்
புள்ளமங்கை நாட்டியத்தான்குடி கலையநல்லூர்
புக்கொளியூ ரவிநாசி பூவனூர்துறையூர்
கொள்ளிக்காட் டிடைச்சுர மச்சிறுபாக்கம்விளமர்
கொட்டையூர் கொடுங்குன்றங் கூடலையாற்றூரே. (௪)

நெல்வேலி திருவழுந்தூர் தருமபுரம்பயற்றூர்
நெடுங்களம் வக்கறை யிரும்பைமாகாளம்வடுகூர்
நெல்வெண்ணெ வடகரை மாந்துறை திருவிற்கோலம்
நீடூர் சக்கரப்பள்ளி யகத்தியாம்பள்ளி
நெல்வாயில் பேணுபெருந்துறை நாலூர்மயானம்
நெல்லிக்கா விற்குடி வீரட்ட மதிமுத்தம்
வல்ல மறையணிநல்லூர் தலையாலங்காடு
வாட்போக்கி திருநாவலூர் மயிலாப்பூரே. (௫)

திருவாரூர்ப்பரவையுண் மண்டளி சாத்தமங்கை
சிற்றேமந் தெளிச்சேரி திருவு சாததானங்
காவிரந் திருவாலப்பொழில் வெண்ணெநல்லூர்
கச்சியநேகதங் காவதங்கோடிக்குழகர்
அரிசிலின் றென்குடித்திட்டை வடமுல்லைவாயி
லம்பர்பெருந்திருக்கோயில் வெண்பாக்கஞ்சுழியல்

பெருமண மிந்திரநீலப்பருப்பதம் வேற்காடு
பேரெயில் பாத்துறை மூக்கீச்சர மூண்டீச்சரமே. (௬)

பறியலூர்வீரட்டங் கானாட்டுமுள்ளூர்
பாதாளீச்சர மெதிர்கொள்பாடி வலிதாயஞ்
சிறுகுடிகச்சூராலக்கோயில் கொள்ளம்பூதூர்
திருப்புறவார்பனங்காட்டூர் விளநகர் தண்டலைநீ
ணெறி யரதைப்பெரும்பாழியூறல் கருவூரா
நிலையிடும்பாவனங் கடுவாய்க்கரைப்புத்தூர் கடம்பந்
துறை திருவேடகந் திருவஞ்சைக்கள மாடானை
சேரபுரங் காறாயில் வடகுரங்காடு துறையே. (எ)

திருமாணிக்குழி வேட்டக்குடி திருவாப்பாடி
திருந்துதேவன்குடி மாகறல் சத்திமுற்றந்
திருவாப்பனூர் மீயச்சூரவ்வூர் தன்னிற்
சிறந்ததிருவிளங்கோயில் வெஞ்சமாக்கூட்
டிருநீலக்குடி மண்ணிப்படிக்கரை நன்னிலத்துப்
பெருங்கோயி றிருநணாத் திருப்பட்டீச்சரமே
திருவீய்ங்கோய்மலை வன்பார்த்தான்பனங்காட்டூர்
திருப்புகலூர்வர்த்தமானீச்சரம்பாம்புரமே. (அ)

கடைமுடியே யோமகாந் தன்றளி கோட்டூர் வை
கன் மாடக்கோயிலிடை யாறு பழையாறை
வடதளி நற்றிணைநகரங் கோணமாமலைசேர்
வன்னியூர்கருவிலி யனேகதங் காவதநல்
லிடைமருது கடிக்குளநற்றிருக்கள ரென்றிவைகட்
கிரும்பதிக மொவ்வொன்றே யிசைத்திடுகே விப்பாற்
குடவாயில் புனவாயி றாங்கானைமாடங்
கோழம்ப மவளிவ ணல்லூர் கோலக்காவே. (௯)

குருகாவூர் திருவெள்விக்குடி விசையமங்கை
குற்றாலங் குடமூக்கு கோட்டாறு பனையூர்
கருகாவூர் குரங்காடுதுறை யோமாம்புலியூர்
கண்டியூர் வேதிகுடி கானூர் கோகன்னங்
திருவாரூரறநெறி பந்தணைநல்லூர் நல்லந்
திருக்கொண்டீச்சரந் தேவூர் திரிச்சிராப்பள்ளி
பெருவேளூர் கீழ்வேளூ ரெறும்பியூர் கானப்
பேர் திருமங்கலக்குடி யாக்கூர் சேவலூரே. (௧௦)

திருப்பரங்குன்றந் திருப்பாதிரிப்புலியூர்குறுக்கை
திருப்புத்தூர்மணஞ்சேரி பாச்சிலாச்சிராமங்
கருப்பறியலூர் கேதீச்சரங் கேதாரங்
கச்சிமேற்றளி திருமேலைக்காட்டுப்பள்ளி
அருத்தியுறும்பட்டினத்துப் பல்லவனீச்சரம்பே
ரன்பிலாலந்துறை பராய்த் துறைவேட்களமிங்
குரைத்தசீர் வன்னியூ ரிவ்விரண்டாமபதிக
முள்ளதலந்திருக்கடவூர் மயானம் வாஞ்சியமே. (௧௧)

துருத்தி திருநணிப்பள்ளி திருமருக றிருப்பூக்
அருத்தி புரம்பியங்கடம்பூர் புள்ளிருக்கும்வேளூர்
ஆரத்துறைவாட் கொளிபுத்தூர் வான்மியூர் பாரு
ரம்பர்மாகாள மயிலாடுதுறை வாய்மூர்
திருக்கழுக்குன்றம் பாண்டிக்கொடுமுடி ராமீசஞ்
செங்காட்டங்குடி வெண்ணிதிருச் செம்பொன்பள்ளி
பருப்பதம் புன்கூரரிசிற்கரைப் புத்தூர் சேறை
பஞ்ஞீலிகற்குடிமா மலைப்பதிகமூன்றே. (௧௨)

வலம்புர மாலங்காடு சிவபுரங் காளத்தி
வலிவலஞ் சாய்க்காடு திருக்கோடிக்கா நகர
நலர்திகழும் பூவணங் கோளிலிநின்றியூரே
நறையூர்ச்சித்திச்சரமு நான்காகும்பதிகம்

வலஞ்சுழிநல்லூர் பழன மாமாத்துரண்ணு
மலைகடவூரின்னம்பர் நாவாயூரைந்தூ
நிலந்திகழ்நாகீச்சர மாற்பேறுமழபாடி
நெய்த்தானம் வெண்காடு நீள்பதிகமாறே. (௧௩)

கைலாய மானைக்கா நள்ளாறு நாகைக்
காரோணந் திருச்சோற்றுத்துறை யேழுபுகலூர்
வயலாருங்கழிப்பாலை யொற்றியூர் திருவா
வடுதுறை யெட்டாந் தில்லை மறைக்காடு மதுரை
யியலாருமுதுகுன்றம் பதினொன்று கச்சி
யேகம்ப மிடைமரு தீராறையாறதிகை
யயலீரொன்பான் வீழியாரூர்சீகாழி
யறுநான்கு முப்பானுன் கெழுபத்தொன்றுமே. (௧௪)

திருப்பதிகக்கோவை முற்றிற்று.

வேறு.

திருஞானசம்பந்த ரருளிச்செய்த
திருப்பதிகம்பொது வகையாலேழதாகு
மருண்ஞானத்தவமுநிவர் முப்பத்தேழா
மாரூரனம்பியொரு நான்காமாக
வருஞானத்திருப்பதிக நாற்பத்தெட்டா
மற்றுமிக்கப்பதிகமொடு மறைதேர்மூவர்
இருநாவான்மொழிந்த திருப்பதிகம்யாவு
மியம்பிலெழுநூற்றுத் தொண்ணூற் றேழன்றே.

திருச் சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ வேதாகம விபவானந்த சாக்ஷாத்காரமாயும் பரிபூரணராயுஞ் சச்சிதானந்தராயும் விபுவாயும் அருவாயும் உருவாயும் அருவுருவமாயும் ஆதிமத்தியாந்த ரகிதராயும் விளங்குமெண்குணகடவுளாகிய நம்மிறைவரான பரமேஸ்பரன் றனத

டியார்களுடைய பக்குவா பக்குவத்துக்குத்தக்கபடிசாலோக சாமீப சாரூப சாயுச்சிய பதங்களை யளித்தாள்வதற்கான திருவுருவுடனெழுந்தருளியிருக்கின்ற திவ்வியக்ஷேத்திரங்களினது திருநாமங்களு மத்தலங்களிற் கருணுமுகூர்த்தமா யெழுந்தருளியிருக்குஞ் சிவபிரானது காரணப்பெயராகிய திருநாமமும் அச்சிவ பிரான் றிருவாமத்தமைந்த உமாமகேஸ்வரியாய் அருட்சத்தியின் றிருநாமமும் அத்தலதீர்த்தமும் விருக்ஷமும் முக்கியமான மான்மியங்களும் அங்ஙனம் பேறுற்றநாயன் மார்களின்றிருநாமமும் சமயாசாரியர்களில் மூவரருளிய திருப்பதிகமுள்ள தொகையும் ஒவ்வொருதலங்களினின்று மற்றொருதிருப்பதிக் கேகுங் கடிகையி னளவுந்திக்கும் அறிந்தவாறியம்புவானெடுத்துக் கொண்டவ்வன் கூறியபடியே எந்நாட்டினுஞ் சிறப்புற்றோங்கிய தென்னாடாகிய சோழவளநாட்டிற் காவேரியின்வடகரையில் திருக்கோயிலென்னுஞ் சிதம்பரம் ஆதியாகக் கூறுகின்றாம்.

திருச்சிற்றம்பலம்.

காவேரியின் வடகரையில்.

முதலாவது. கோயில் என்பது சிதம்பரம் அதில்எழுந்தருளி யிருக்கின்ற நித்தியானந்த வைபவராகிய மூர்த்தி சபாநாயகர் தேவியார் சிவகாமவல்லியம்மை மேற்படி திருமூலட்டானம் சிதம்பரேசுரரென்னுந் திருமூலநாதர் உமையம்மை அத்திவ்விய க்ஷேத்திரத்திற் றேவியாராகிய சிவகாமவல்லியம்மை வாமநின்றுதிருநோக்குற்றுமகிழவும் பதஞ்சலிவியாக்கிரம பாதராகிய முனிவரர் முதலிருடிகளும்பிரமவிஷ்ணுஇந்திராதி தேவர்களும் பேரானந்தத்தின் மூழ்கவும் நம்பெருமானுகிய சபாநாயகர் பேரம்பல சபைக்கதிபராய்ச் சிற்சபையினின்று வலது திருவடியை முயலகன் மீதூன்றிஇடது திருத்தாளை யெடுத்து குஞ்சிதபாதத்தைக் காட்டி சதாகாலமும் இரக்ஷாதாண்டவமாகிய பரமானந்த நடனஞ்செய்தருளுகின்ற தலம் தில்லைமூவாயிரவர் பூசிக்குந்தலம் சமஸ்த தலங்களி

ளுள்ள சிவகலைகளனைத்தும் அர்த்தயாமத்தில் வந்தொடுங்கிப் பின் செல்லாநிற்குந் தலம் சிவகங்கை தீர்த்தம் பரமானந்தத் தீர்த்தமுதலியன ஆலவிருட்சம் மாணிக்கவாசக சுவாமிகள் திருநாளைப்போவார்நாயனுர் திருநீலகண்டநாயனுர் உமாபதி சிவாசாரியார் ஆனந்தமுத்தியுற்றதலம் இதற்கு ஆளுடைய பிள்ளையாரென்னுந் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகம் உ - ஆளுடைய வாகீசராகிய அப்பர்சுவாமிகளென்னும் திருநாவுக்கரசு சுவாமிகளருளிச்செய்த திருப்பதிகம் அ - ஆளுடையநம்பி யாரூரரென்னும் சுந்தரமூர்த்தி சுவாமிகளருளிச்செய்த திருப்பதிகம் க - ஆக. ௰௧ அத்தலத்தின் றென்கிழக்கிரண்டுகடிகை தூரத்தில்.

உ. திருவேட்களம் எ-து மூங்கில்வனம் சுவாமி பாசுபதேசுரர் அம்மன் நல்லநாயகி தீர்த்தம் சிவகங்கை திருஞானபதிகம் க-திருநாவுபதிகம்-க-ஆக. உ-அதற்குத்தெற்கு -க கடிகையில்.

ஙு. திருநெல்வாயில் எ-து சிவபுரி சுவாமி உச்சிநாதேஸ்வரர் அம்மன் கனகாம்பிகை தீர்த்தம் கிருபாசமுத்திரம் திருஞானபதிகம் க-அதற்குத்தெற்கு-வ-கடிகையில்.

ச. திருக்கழிப்பாலை எ-து காரைமேடு சுவாமி பால்வண்ணேஸ்வரர் அம்மன் பொற்பத வேதநாயகி தீர்த்தம் கொள்ளிடம் திருஞானபதிகம் உ - திருநாவுபதிகம் ரு - சுந்தரபதிகம் க-ஆக. அ - அதற்குத் தென்கிழக்கு ரு-கடிகையில்.

ரு. திருப்பெருமணம் எ-து ஆச்சாபுரம் சுவாமிசிவலோகத்தியாகேசுரர் அம்மன் நங்கையுமையம்மை பஞ்சாக்கரதீர்த்தம் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமணங்காணவந்த திருநீலகண்டத்து யாழ்ப்பாணநாயனுர் முருகநாயனுர் திருநீலநக்கநாயனுர் மற்றுஞ்சில அடியார்களுடன் ஆளுடைய பிள்ளையாரும் சோதியிற்கலந்ததலம் திருஞானபதிகம க- அதற்கு வடகிழக்கு ரு-கடிகையில்.

௬. திருமயேந்திரப்பள்ளி எ-து கோயிலடிப்பாளையம் சுவாமி திருமேனியழகர் அம்மன் வடிவாளம்மை தீர்த்தம் மந்திர புஷ்கரணி திருஞானபதிகம் ௧ - அதற்குத்தெற்கு ௧0-கடிகையில்.

௭. திருமுல்லைவாயில் எ-து தென்றிருமுல்லைவாயில் சுவாமி முல்லைவனநாதர் அம்மன் கோதையம்மை சக்கரதீர்த்தம் திருஞானபதிகம் ௧ - அதற்குத் தென்மேற்கு ௨௦-கடிகையில்.

௮. திருக்கலிக்காமூர் எ-து அன்னப்பன்பேட்டை சுவாமி சுந்தரேஸ்வரர் அம்மன் அழகுவனமுலையம்மை அம்புலி தீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குத்தெற்கு ௫-கடிகையில்.

௯. திருச்சாய்க்காடு எ-து சாயாவனம் சுவாமி சாயாவனேசுரர் அம்மன் குயிலினுநன்மொழியம்மை சங்கமுகதீர்த்தம் திருஞானபதிகம் ௨-திருநாவுபதிகம் ௨- ஆக. ௪ அதற்குக் கிழக்கு ௨ கடிகையில்.

௧0. திருப்பல்லவனீச்சரம் எ-து காவேரிப்பூம் பட்டினம் சுவாமி பல்லவனப் பூமணேசுரர் அம்மன் சௌந்தரியம்மை திருஞானபதிகம் ௨-இயற்பகைநாயனார் வழிபட்டதலம் அதற்கு வடமேற்கு ௨௫-கடிகையில்.

௧௧. திருவெண்காடு சுவாமி சுவேதாரண்யேசுவரர் அம்மன் பிரமவித்தியாநாயகியம்மை தீர்த்தம் சோமசூரியாக்கினியாகிய முக்குளம் விருக்ஷம் வடவால் திருஞானபதிகம் ௩-திருநாவுபதிகம ௨ - சுந்தரபதிகம ௧-ஆக. ௬ - அதற்கு மேற்கு ௫ - கடிகையில்.

௧௨. திருக்காட்டுப்பள்ளி சுவாமி ஆரணியசுந்தரர் அம்மன் அகிலாண்ட நாயகியம்மை தீர்த்தம அமிர்தப்பொய்கை திருஞான பதிகம் ௧ - அதற்கு வடமேற்கு ௪-கடிகையில்.

௧௩. திருக்குருகாவூர் சுவாமி திருமேனி வெள்ளடையீசுரர் அம்மன் காவியங்கண்ணியம்மை தீர்த்தம் வெள்ளடை

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குத் தை யமாவாசை யிற் றிருவநாளாற் குருகசாந்தி செய்வித்த கூபதீர்த்தம் அதற்கு வடகிழக்கு க-கடிகை தூரம் சிவபெருமான் சென்று சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சித்திராபருவத்தில் கட்டமுது கொடுத்து வேடரூபமாய் ஆலயத்துக்கழைத்துவந்து மறைந்தனர் திருஞானபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக. உ-அதற்குந் தென்மேற்கு ௩-கடிகையில்.

கச. திருச்சீர்காழி சுவாமி பிரமபுரீசுரர் அம்மன் திருநிலை நாயகியம்மை பிரமதீர்த்தம் கழுமல நதி ஆவணிமீ-திருவாதிரையில் ஆளுடையபிள்ளையாரென்னும் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்திருவவதாரம்ஆதிசைவப் பிராமணமரபு அவனைப்பாடின் திருத்தொண்டு அம்மையார் மேற்படி சுவாமிகளுக்கு ௩-வயதில் சித்திரை மீ-சட்டிதிதியில் ஞானப்பாலூட்டினார் அத்தலம் பனிரண்டு திருநாமங்களுடையது திருஞான பதிகம்-௬எ-திருநாவு பதிகம் ௩-சுந்தரபதிகம் க - ஆக எக-அதற்குத் தென்மேற்கு ௨-கடிகையில்.

கரு. திருக்கோலக்கா எ-து திருத்தாளமுடையார் கோயில் சுவாமி சப்தபுரீசுரர் அம்மன் ஓசைகொடுத்தநாயகி சூரியதீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகட்குச்சுவாமி திருத்தாளங் கொடுக்க அதற்கம்மை யோசைகொடுத்ததாக ஐதிகம் திருஞான பதிகம் க - சுந்தரபதிகம் - க-ஆக. உ-அதற்குமேற்கு ௩ - கடிகையில்.

கசு. திருப்புள்ளிருக்கும் வேளூர் எ-து வயித்திசுரன்கோயில் சுவாமி வயித்தியநாதக்கடவுள் அம்மன் தையனாயகியம்மை தீர்த்தம் சித்தாமிர்தம் விருக்ஷம் வேம்பு வேதம் சூரியன் சுப்பிரமணியர் சம்பாதி சடாயு இராமசுவாமி இலக்குமணர் முதலியோர் பூசித்துத் திருவருட்பெற்ற தலம் திருஞானபதிகம் க-திருநாவு பதிகம் உ-ஆக ௩-அதற்குத் தென்கிழக்கு-க கடிகையில்.

கஎ. திருக்கண்ணார்கோயில் எ-து குறுமாணக்குடி சுவாமி கண்ணாயிரேசுரர் அம்மன் முருகு வளர் கோதைநாயகி தீர்த்தம் மணிகர்ணிகை திருஞானபதிகம் க-அதற்குத் தென்கிழக்கு ௩ - கடிகையில்.

கஅ. திருக்கடைமுடி எ-து கீழையூர் சுவாமி கடைமுடியீசுரர் அம்மன் அபிராமவல்லி தீர்த்தம் கடைமுடி திருஞானபதிகம் க - அதற்குவடமேற்கு ௩-கடிகையில்.

கக. திருநின்றியூர் சுவாமி மகாலெட்சுமி ஈசுரர் அம்மன் உலகநாயகி தீர்த்தம் நீலமலர்ப் பொய்கை திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க - சுந்தர பதிகம் உ - ஆக. ச - அதற்குவடமேற்கு மூன்று கடிகையில்.

உ0. திருப்புன்கூர் சுவாமி சிவலோகநாதர் அம்மன்சொக்கநாயகி ரிட்பதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க - சுந்தரபதிகம் க-ஆக. ௩ - திருநாளைப்போவார் நாயனருக்காக நந்தீசுரரைவிலகச் செய்து தரிசனங்கொடுத்த தலம் அதற்குத் தென்மேற்கு ச - கடிகையில்.

உக. திருநீடூர் சுவாமி அருட்சோமநாதர் அம்மன் வேயுறுதோளியம்மை தீர்த்தம் செங்கழுநீரோடை சுந்தரபதிகம் க - முனையடுவார் நாயனர் முத்தியடைந்ததலம் அதற்குமேற்கு உ - கடிகையில்.

உஉ. திருவன்னியூர் எ-து பொன்னூர் சுவாமி ஆபத்சகாய ஈசுரர் அம்மன் பெரியநாயகியம்மை தீர்த்தம்சிவகங்கை திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க - ஆக. உ-அதற்குமேற்கு உ-கடிகையில்.

உ௩. திருவேள்விக்குடி சுவாமி கலியாணசுந்தரேசுரர் அம்மன் பரிமளசுகந்தநாயகி மங்களதீர்த்தம் திருஞானபதிகம் க - சுந்தரபதிகம் க - ஆக. உ-அதற்கு வடமேற்கு கஉ-கடிகையில்.

உச. திருவெதிர்கொள்பாடி என்பது மேலத்திருமணச்சேரி சுவாமி ஐராவதேசுரர் அம்மன் மலர்க்குழனன்மாது தீர்த்தம் சிவகங்கை சுந்தரபதிகம் க - அதற்கு வடகிழக்கு - ௨-கடிகையில்.

உரு. திருமணச்சேரி என்பது கிழத்திருமணச்சேரி சுவாமி அருள்வள்ள நாயகேசுரர் அம்மன் யாழின் மொழியம்மை சமுத்திரதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க - ஆக உ - குலச்சிறைநாயனார் வழிபட்டதலம் அதற்கு வடகிழக்கு ௩ - கடிகையில்.

உசு. திருக்கொறுக்கை சுவாமி வீரட்டேசுரர் அம்மன் ஞானம்பிகை சூலதீர்த்தம் திருநாவுபதிகம் உ-இதுகாம தகனஸ்தலம் அட்டவீரட்டத்தி லொன்று அதற்கு வடகிழக்கு ௩-கடிகையில்.

உஎ. திருக்கருப்பறியலூர் என்பது தலைஞாயிறு மேலக்காழி சுவாமி குற்றம்பொறுத்த யீசுரர் அம்மன் கோல்வளையம்மை சூரியதீர்த்தம் திருஞானபதிகம் க-சுந்தரபதிகம் க - ஆக. உ- அதற்குவடகிழக்கு க - கடிகையில்.

உஅ. திருக்குரக்குக்காவில் சுவாமி கொந்தளசுரர் அம்மன் கொந்தளநாயகியம்மை சுந்தரதீர்த்தம் திருநாவு பதிகம் க-அதற்குத்தென்மேற்கு ௨௦-கடிகையில்.

உகூ. திருவாட்கொளிபுத்தூர் சுவாமி மாணிக்க வண்ணேசுரர் அம்மன் வண்டார்பூங்குழலி பிரமதீர்த்தம் விருக்ஷம் வாகை திருஞானபதிகம் உ - சுந்தரபதிகம் க - ஆக. ௩- அதற்கு வடமேற்கு ௨-கடிகையில்.

௩௦. திருமண்ணிப்படிக்கரை என்பது இலுப்பைப்பட்டு சுவாமி நீலகண்டேசுரர் அம்மன் அமுதகரவல்லி அமுததீர்த்தம் சுந்தரர்பதிகம் க - அதற்கு' வடமேற்கு உ - கடிகையில்.

௩க. திருவோமாம்புலியூர் சுவாமி துயரந்தீர்த்த நாசுரர் அம்மன் பூங்கொடியாம்பிகை தீர்த்தம் கொள்ளிடம் இத்து

ட்ன் மேற்பாரிசத்தில் வடதளியென்றொரு ஆலயம் இரண்டிற்கும் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக. உ-அதற்கு வடகிழக்கு உ-கடிகையில்.

௬உ. திருக்காறுட்டு முள்ளூர் சுவாமி பதஞ்சலிநாதர் அம்மன் கோல்வளைக்கையம்மை தீர்த்தம் புஷ்கரணி சுந்தரபதிகம் க - அதற்கு வடகிழக்கு ச - கடிகையில்.

௬௩. திருநாரையூர் சுவாமி சவுந்தரேசுரர் அம்மன் திரிபுரசுந்தரவல்லி காருண்ய தீர்த்தம் விருக்ஷம் புந்நாகம் நம்பியாண்டார் நம்பிவிநாயகக்கடவுளைப் பூசித்து மெய்ஞ்ஞான முதலிய பேறுகளடைந்ததலம் திருஞானபதிகம் ௩ - திருநாவுபதிகம் உ-ஆக. ரு - அதற்குத் தென்மேற்கு ரு- கடிகையில்.

௬ச. திருக்கடம்பூர் எ-து மேலைக்கடம்பூர் சுவாமி அமுதகடநாயகர் அம்மன் சோதிமின்னம்பாள் ஆதிதீர்த்தம் திருஞானபதிகம் க -திருநாவுபதிகம் உ - ஆக ௩ - அதற்குத்தென்மேற்கு அ - கடிகையில்.

௬ரு. திருப்பந்தணை நல்லூர் சுவாமி பசுபதீசுரர் அம்மன் காம்பனதோளி மணவாளச்சேலம் தீர்த்தம் புஷ்கரணி விருக்ஷம் கொன்றை அம்மை சந்நிதி வடக்குமுகம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக. உ - அதற்குத்தென்மேற்கு க - கடிகையில்.

௬௬. திருக்கஞ்சனூர் சுவாமி அக்கினிசுரர் அம்மன்கற்பகநாயகி அக்கினிதீர்த்தம் விருக்ஷம் புரசு திருநாவுபதிகம்-க மானக்கஞ்சாறநாயனர் தனது அருமைக்குமாரத்தியின் விவாகமஹோற்சவகாலத்தில் அப்பெண்ணின் கூந்தலை அடியோடரிந்து மகா விரதசமயப் பிராமணசிலராயும் ஆதிசைவராயும் திருவேடம்பூண்டுவந்த சிவபெருமானுக்குக்கொடுக்கநீட்டி முத்தியடைந்ததலம் அதற்குக் கிழக்கு க - கடிகையில்.

௬எ. திருக்கோடிக்கா சுவாமி கோடிகாயீசுரர் அம்மன் வடிவாம்பிகையம்மை ; அகஸ்திய தீர்த்தம் திருஞானபதிகம்-க

திருநாவுப்திகம் ௩ - ஆக. ௪ - அதற்குமேற்கு உ-கடிகையில்.

௩௮. திருமங்கலக்குடி சுவாமி பிராணவரதேசுரர் அம்மன் மங்களநாயகி மங்களதீர்த்தம் விருட்சம் கோங்கிலவம் திருஞானபதிகம் க - திருநாவுபதிகம் க-ஆக. உ-ஏயர்கோன் கலிக்காமநாயனூர் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடத்திற் பக்தியுடையவரா யிருந்து முத்தியடைந்ததலம் அதற்குவடமேற்கு ௩-கடிகையில்.

௩௯. திருப்பனந்தாள் சுவாமி சடையப்பேசுரர் அம்மன் பெரியநாயகி சிவலிங்கப்பெருமானூர் திருமாலைத்தொண்டாற்றிய தாடகையம்மாளுக்கு வளைந்தும் குங்கிலியக்கலைய நாயனூருக்கு நிமிர்ந்தும் மேன்மையுற்றதலம் பிரமதீர்த்தம் விருக்ஷம் பனைதிருஞானபதிகம் க-அதற்குத்தென்மேற்கு ௫ - கடிகையில்.

௪0. திருவாப்பாடியில் சுவாமி பாலுகந்த ஈசுரர் அம்மன் பெரியநாயகி தீர்த்தம் மண்ணியாறு விருக்ஷம் ஆத்திஅர்த்த மண்டபத்துக்கும் மகாமண்டபத்துக்கும் மத்தியில் உள்ளாலயசுவாமிக்குத் தீபாராதனை செய்தவுடன் சண்டேசுரருக்குத் தீபாராதனை தண்டீசநாயனூர் திருவவதாரஞ்செய் தடலுடன் சிவபெருமான் றிருவடியில் வீற்றிருந்ததலம் திருஞானபதிகம் க-அதற்குத்தெற்கு ௨-கடிகையில்.

௪க. திருச்சேய்ஞலூர் சுவாமி கிரீசுரர் அம்மன் ஜெகதேவியம்பாள் சத்ததீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத் தென்மேற்கு ௩ - கடிகையில்.

௪உ. திருத்தேவன்குடி சுவாமி கற்கடகேசுரர் அம்மன் அருமருந்தம்பாள் பங்கயதீர்த்தம் நண்டுபூசித்ததலம் இப்பொதும் ஒருநிறப்பசுக்களின் பால் பதின்கலம் சிவலிங்கப்பெருமானூர் திருமுடியில் அபிடேகஞ்செய்தா லம்முடிமீது ஒரு பொன்னிறமுடைய நண்டு ஊரத்தரிசனமாம் திருஞானபதிகம் க-அதற்குத் தெற்கு ௫-கடிகையில்.

சரு. திருவியலூர் எ-து பண்டாரவாடைத் திருவியலூர் சுவாமி யோகாந்தநாதேசுரர் அம்மன் சௌந்தரநாயகி சடாயு தீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்கு மேற்கு ௭-கடிகையில்.

சச. திருக்கொட்டையூர் சுவாமி கோடீசுரர் அம்மன் பந்தாடு நாயகி கோடிதீர்த்தம் திருநாவுபதிகம் க-அதற்கு வடமேற்கு கஉ - கடிகையில்.

சடு. திருவின்னம்பர் சுவாமி அம்பர்மூர்த்தீஸ்வரர் அம்மன் கொந்தார் பூங்குழலி எழுத்தறிநாயகர் கணக்கப்பிள்ளைக்குட் கணக்கராக சிவபெருமானிருந்து வெள்ளேட்டை வைத்து கோயிற்கணக்கொன்றுங் குறைவுறாமல்அரசனிடங் கணக்கொப்பிவைத்த தலம் அப்பர்சுவாமிகள் பதிகத்தில்காண்க. ஐராவததீர்த்தம்-திருஞானபதிகம், க. திருநாவுபதிகம் ச. ஆக-டு. அதற்குவடக்கு-க, கடிகையில்.

சசு. திருப்புறம்பியம் சுவாமி சாக்ஷிநாதேசுரர் - அம்மன் சொல்லனநாயகி-பிரமதீர்த்தம் புன்னைவிருக்ஷம்-இதிற்பிரளயங்காத்தபிள்ளையார் ஆவணிமாசம் விநாயகசதுர்த்தியில் சுச-சேர். தேன்பரிவட்டங்கொண் டொற்றிக்கொடுக்க அவ்வளவும் விநாயகமுகூர்த்தத்திற் சுவறிவிடுகிறது வன்னிவிருக்ஷம் வணிசப்பெண்ணுக்குச்சாக்ஷி சொன்னதலம்- திருஞானபதிகம்-க. திருநாவுபதிகம்-க. சுந்தரபதிகம்-க. ஆக-௩. அதற்குவடமேற்கு-௩-கடிகையில்.

சஎ. திருவிசைய மங்கை-சுவாமி விசையநாதேசுரர்-அம்மன் மங்கைநாயகி-அருச்சுனதீர்த்தம்-திருஞானபதிகம்-க. திருநாவுபதிகம்-க- ஆக-உ. அதற்குவடமேற்கு ௫ - கடிகையில்.

சஅ. திருவைகாவூர் எ-து வில்வ வனம் சுவாமி வில்வவனேசுரர் அம்மன் பூவைவல்லி சுற்றுவதீர்த்தம் திருஞானபதிகம் க - அதற்குத்தென்மேற்கு சு - கடிகையில்

சகூ, திருவடகுரங்காடுதுறை சுவாமி குலைவணங்கீசுவரர் அம்மன் அழகுசடைநாயகி தீர்த்தம் காவேரி திருஞானபதிகம-க-அதற்குமேற்கு-௬-கடிகையில.

ரு0 திருப்பழனம் சுவாமி ஆபத்சகாய ஈசுவரர் அம்மன் பெரியநாயகி மங்களதீர்த்தம் இதற்குத் திருப்பதிகக்கோவையிலுள்ள தொகை பதிக-ரு-க்கு திருஞானபதிகம்-க-திருநாவுபதிகம்-ரு-ஆக-சு-கூடயிருக்கிற ஒருபதிகம் மதிக்கப்படவில்லை அதற்குமேற்கு ஒன்றரை கடிகையில்.

ருக. திருவையாறு சுவாமி செம்பொற்சோதிநாதர் அம்மன் அறம் வளர்த்தநாயகி நந்திகேசுரர் பூசித்தது பஞ்சணதீர்த்தம் தென்பிரகாரத்தில் சூரியதீர்த்தம் ஆடியமாவாசையில் அப்பர்சுவாமிகளுக் கங்குள்ள சராசரமெல்லாஞ் சிவமுஞ்சத்தியுமாக சகலமும் தோன்றச்செய்து திருவருளாற் கைலாய தரிசனமுங் கொடுத்த தலம் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்காக காவேரியின் பிரவாகத்தை யொதுக்கித் திருக்கூட்டத்துட னழைத்துத் தரிசனங்கொடுத்ததலம் நந்திகேசுரருக்குத் திருமழபாடியில் திருக்கலியாணம் சித்திரைமாசம்விசாகத்தில் சத்தஸ்தானம் திருஞானபதிகம்-ரு-திருநாவுபதிகம்-கஉ-சுந்தரபதிகம்-க-ஆக-கஅ-அதற்குமேற்கு முக்கால் கடிகையில்.

ருஉ. திருநெய்த்தானம் எ-து தில்லைஸ்தானம் சுவாமி நெய்யாடியப்பர் அம்மன் வாலாம்பிகை தீர்த்தம் காவேரி திருஞானபதிகம்-க-திருநாவுபதிகம்-ரு-ஆக-சு-அதற்கு மேற்கு-க-கடிகையில்.

ருங. திருப்பெரும்புலியூர் சுவாமி வியாக்கிரமபுரீசுரர் அம்மன் சௌந்தரநாயகி தீர்த்தம் காவேரி திருஞானபதிகம்-க-அதற்குவடமேற்கு - உ - கடிகையில்.

ருச. திருமழபாடி சுவாமி வச்சிரதம்பேசுரர் அம்மன் அழகாம்பிகை தீர்த்தங்கள் சிவகங்கை இலக்குமி தீர்த்தம்-உம் சிலகாலக்குமுன் கொள்ளிடத்தின் முழுகிப்போய் விட்டன அதுமுதற் கொள்ளிடமே தீர்த்தமா யிருக்கின்றது தீர்த்தங்களிருந்தவை அப்புராணத்தாற் றெரிகின்றது திருஞா

ஞானபதிகம்-ந-திருநாவுக்கரசுபதிகம்-உ-சுந்தரபதிகம்-க-ஆக-சு-அதற்கு வடக்கு ஏழரை கடிகையில.

ருரு, திருப்பழுவூர் எ-து கீழப்பழுவூர் சுவாமி வடமூலநாதர் அம்மன் அருந்தவநாயகி இஃதட்டவீரட்டத்திலொன்று இதுவும் யானையைச் சம்மாரஞ்செய்தவிடம் பிரமதீர்த்தம் இதற்கொன்றரைக் கடிகையிலுள்ள மேலைப்பழுவூரிலிருக்கின்ற மீனாக்ஷியம்மன் சுந்தரேசுரராலயஞ் சிலநாட்கு முந்திப் பிரதிட்டைசெய்திருப்பதால் மேற்சொல்லிய கீழப்பழுவூரே ஆதிக்ஷேத்திரம் திருஞானபதிகம்-க-அதற்குத்தென்மேற்கு ஏழரை கடிகையில்.

ருசு. திருக்கானூர் சுவாமி செம்மேனியப்பர் அம்மன் சிவயோகநாயகி வேததீர்த்தம் திருஞானபதிகம்-க-திருநாவுபதிகம்-க-ஆக-உ-அதற்கு வடமேற்கு-ச-கடிகையில்.

ருஎ, திருப்பேரன்பிலாலந்துறை எ-து கீழன்பிலாலந்துறை சுவாமி சத்திவாகீசுரர் அம்மன் சௌந்தரியநாயகி காயத்திரிதீர்த்தம் திருஞானபதிகம்-க-திருநாவுபதிகம-க-ஆக-உ அதற்குவடமேற்கு-ரு-கடிகையில்.

ருஅ திருமாந்துறை சுவாமி அம்பரவருணேசுரர் அம்மன் அழகிலுயர்நாயகி காயத்திரிதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத் தென்மேற்கு-ந-கடிகையில்.

ருகூ. திருப்பாற்றுறை சுவாமி திருமூலநாதேசுரர் அம்மன் மோகாம்பிகை தீர்த்தம் கொள்ளிடம் சிவபெருமான் பொன்னிறமாய்ப் புத்திலெழுந்தருளி யிருந்ததலம் திருஞானபதிகம்-க-அதற்குத் தென்மேற்கு-ச-கடிகையில்.

சு0. திருவானைக்கா எ-து சம்பகேசுரம் சுவாமி சம்புகேசுரர் அம்மன் அகிலாண்டவல்லி தீர்த்தம் காவேரி விருட்சம் சம்பு நாவல் வெள்ளானை சிலந்திப்பூச்சி முதலிய பூசித்துப் பேறுற்றதலம் கோச்செங்கட் சோழன் கழுத்திலிருந்து காவேரியில் விழுந்துபோன முத்துமாலையை திருமஞ்சனக் குடத்திற் திருவருளால் வரச்செய்து தரித்துக்கொண்ட

தலம் சிவபெருமான் திருக்கரத்தாற் திரு நீறள்ளிக் கூலியா ட்களுக்களித்து மதிளெழுப்பியதலம் அது இப்போதுநீ திட்டான் திருமதிளென்றும் பேர்வழங்குகின்றது அப்புலிங்கம் இஃது பஞ்சபூத க்ஷேத்திரத்தி லொன்று திருஞானபதிகம் ரு-திருநாவு பதிகம் ரு - சுந்தரபதிகம் க-ஆக. எ-அதற்குவட மேற்கு அ - கடிகையில்.

சுக. திருப்பைஞ்ஞீலி எ-து லாலிசெடி சுவாமி நீலகண்டேசுரர் அம்மன் விசாலாக்ஷி யம்மை தீர்த்தம் விசாலாக்ஷி அதற்குத்தெற்கு உ கடிகையில் தடாக முந்தோட்டமு முண்டு அதிற்சிவபெருமான் பிராமண ரூபமாயெழுந்தருளி அப்பர்சுவாமி களுக்குக் கட்டமுது கொடுத்து அழைத்துக் கொண்டுவந்து முதலாவது பிரகாரத்தில் விட்டுமறைந்தனர் அதினுற்சோறிடு மீசனென்று பதிகங்கட்டளை யிட்டிருக்கின்றனர் தீர்த்தம் எ - இருக்கின்றது திருஞான பதிகம் க-திருநாவுபதிகம் க-சுந்தர பதிகம் க-ஆக. ரு-அதற்குத் தென்கிழக்கு ரு-கடிகையில்.

சுஉ. திருப்பாச்சிலாச்சிராமம் எ-து திருவாசி சுவாமி மாற்றுவரதீசுரர் அம்மன் வாலசௌந்தரி பிரமதீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் மழவராயன்பெண்ணுக்குமுயலகன் வியாதியைத் தீர்த்ததலம் மேற்படி சுவாமிகள் பதிகம் பாடியபடியால் முயலகனுக்கு மோக்ஷம் அதனுற் சபாபதிமூர்த்தம்சர்ப்பத்தின்மே னடனமுஞ்சடையிற்கிரீடமுமுடையதாயிருக்கின்றது சுந்தரமூர்த்தி சுவாமிகள் அ-காப்புப்பாடது பொன் செம்பாய்க் கொடுக்க மறுபடி ஈ-காப்புப் பாடினவுடனே சிவபெருமான் திருவருளால் விஷ்ணுவைக்கொண்டு அச்செம்புக்காசுமுழுது முறைாத்து பொன்னுகக் காண்பிக்கப் பெற்றுனந்த முற்ற தலம் தீர்த்தம் அன்னமாம் பொய்கை வன்னிவிருட்சம் திருஞானபதிகம் க - சுந்தரப்பதிகம் க-ஆக உ - அதற்கு மேற்கு யிரு கடிகையில்.

சுரு. திருவீயங்கோய் மலை சுவாமி மரகதசல ஈசுரர் அம்மன் மரகதவல்லி அமிர்ததீர்த்தம் இப்போது திருவிங்காத

மலை யெனவழங்குகின்றது ஈ பூசித்த தலம் திருஞான பதிகம் க-ஆக காவேரியின் வடகரையில் சிவஸ்தலம் சுக - ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

காவேரியின் றென்பால் மேற்படி திருவீய்ங்கோய்மலைக்குத்தெற்கு எ - கடிகையில்.

சுச. திருவாட்போக்கி எ-து இரத்தினகிரிமலைசுவாமிஇரத்தினகிரீசுரர் அம்மன் சுரும்பார்குழலி கௌரிதீர்த்தம் திருநாவு பதிகம் க - அதற்கு வடகிழக்கு உ-கடிகையில்.

சுரு. திருக்கடம்பந்துறை சுவாமி கடம்பவனத்தீசுரர் அம்மன் முற்றிலா முலையாள் வடக்குப்பார்த்த சந்நிதிஞான தீர்த்தம் கடம்பவிருட்சம் காலைக்கடம்பர் மத்தியானச் சொக்கர் மாலைத்திருலிங்க நாதர் திருநாவுப்பதிகம் க - அதற்குக் கிழக்கு எஉ - கடிகையில்.

சுசு. திருப்பராய்த்துறை எ - து அகண்டகாவேரி சுவாமி பராய்த்துறை நாதர் அம்மன் பொன்மயிலாம்பிகை தீர்த்தம் காவேரி திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக உ-அதற்குத தென்கிழக்கு எ-கடிகையில்.

சுஎ. திருக்கற்குடி எ-து உய்யக்கொண்டான் பெருமலை சுவாமி உச்சிநாதேசுரர் அம்மன் அஞ்சனாட்சி திருஞானபதிகம் க-திருநாவு பதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக ௩ அதற்குவடகிழக்கு ௩-கடிகையில்.

சுஅ. திருமூக்கிச்சரம் எ-து உறையூர் சுவாமி பஞ்சவருணேசுரர் அம்மன் காந்திமதியம்மை பஞ்சவருணதீர்த்தம் புகழ்ச்சோழநாயனார் கோச்செங்கட்சோழநாயனார் முத்திஸ்தலம் திருஞானபதிகம் க-அதற்குவடகிழக்கு க-கடிகையில்.

சுசு. திருச்சிராப்பள்ளி சுவாமி தாயுமானேசுரர் அம்மன் மட்டுவார்குழலி கைலாயத்துக் கொடுமுடி செவ்வந்தி புட்பத்துக்காக சிவபெருமான் மேற்கு முகமானதலம்

ஒருபக்திமானாகிய பிராமணக் கருப்பணி வருந்தநோக்கிசிவ பெருமான் தாய்போலவந்து மருத்துவம்பார்த்து மறைந்தமையால் தாயுமானவனென்று காரணப்பெயர் தீர்த்தம் காவேரி நன்ற தீர்த்தம் தீபதில்லாதீர்த்தம் திருஞானபதிகம்-க திருநாவுபதிகம் க-ஆக உ-அதற்குக்கிழக்கு ரு - கடிகையில்.

எ௦. திருவெறும்பியூர் சுவாமி எறும்பீசுரர் அம்மன் நறுங்குழனாயகி தீர்த்தம் பிப்பிலீகம் தேவதைகள் எறும்பாய்வந்து பூசித்ததலம் திருநாவுபதிகம் உ- அதற்குக்கிழக்கு-ச-கடிகையில்.

எக. திருநெடுங்களம் சுவாமி நித்தியசுந்தரேசுரர் அம்மன் ஒப்பிலாநாயகி சூரியதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குவடகிழக்கு ச-கடிகையில்.

எஉ. திருக்காட்டுப்பள்ளி எ-து மேலைக்காட்டுப்பள்ளி சுவாமி தீயாடியப்பர் அம்மன் வார்கொண்ட முலையம்மை சூரியதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க- ஆக. உ-அதற்குக் கிழக்கு எ-கடிகையில்.

எரு. திருவாலம்பொழில் சுவாமி ஆத்மநாதஈசுரர் அம்மன் ஞானாம்பிகை தீர்த்தம் திருப்பாற்குளம் திருநாவுபதிகம்-க அதற்குக் கிழக்கு க-கடிகையில்.

எச. திருப்பூந்துருத்தி சுவாமி புட்பவனநாதர் அம்மன் அழகாலமைந்த வம்மை தீர்த்தம் காசிக்கங்கை திருநாவுபதிகம் ரு-அதற்குக்கிழக்கு க-கடிகையில்.

எரு. திருக்கண்டியூர் சுவாமி வீரட்டானநாதர்அம்மன்மங்கலநாயகி பிரமதேவனடுத்தலைகொய்ததலம் அத்தலை சந்திரசேகர ராலயத்திலிருக்கின்றது தீர்த்தம் காவேரி திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க - ஆக உ,- அதற்குக்கிழக்கு ரு-கடிகையில்.

எசு. திருச்சோற்றுத் துறைசுவாமி தொலையாச்செல்வநாதர் அம்மன் ஒப்பிலாம்பிகை சூரிய தீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் ச-சுந்தரபதிகம் க.ஆக சு - இன்னம்

ஒருபதிகம் மதிக்கப்படவில்லை ஆக பதிகம் எ-அதற்குத்தெ ன்மேற்கு க-கடிகையில்.

எஎ. திருவேதிக்குடிசுவாமி வேதபுரீசரர் அம்மன்மங்கை யர்க்கரசி சுந்தரதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக உ - அதற்குத்தென்கிழக்கு ௩-கடிகையில்.

எஅ. திருத்தென்குடி எ-து திட்டைசுவாமி பசுபதீசுரர் அம்மன் உலகநாயகி சக்கரதீர்த்தம் திருஞானபதிகம் க-அத ற்குவடமேற்கு ௩-கடிகையில்.

எகூ. திருப்புள்ளமங்கைசுவாமி பசுபதிநாகேசுரர்அம்மன்பா ல்வளைநாயகி சிவதீர்த்தம் திருஞானபதிகம் க - அதற்குக்கிழ க்கு க -கடிகையில்.

அ0 திருச்சக்கரப்பள்ளி எ-து இரசகிரியையம்பேட்டை சுவாமி ஆலந்தரித்தயீசுரர் அம்மன் அல்லியங்கோதை நாய கி காகதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத் தென்கிழக்கு ௩-கடிகையில்.

அக. திருக்கருகாவூர் சுவாமி முல்லைவனேசுரர் அம்மன் கரும்பனவல்லி பிரமதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவு பதிகம் க - ஆக உ-அதற்குவடக்கு ௩-கடிகையில்.

அஉ. திருப்பாலைத்துறை சுவாமி பாலைவனநாதர் அம்ம ன் தவளவெண்ணகையம்மை தீர்த்தம் காவேரி திருநாவுபதி கம் க - அதற்குத்தென்கிழக்கு கஉ - கடிகையில்.

அ௩. திருநல்லூர் சுவாமி பெரியாண்டேசுரர் அம்மன் தி ரிபுரசுந்தரி அப்பர்சுவாமிகளுக்குத் திருவடி சூட்டியதலம் ச ப்தசாகரதீர்த்தம் திருஞானபதிகம் ௩-திருநாவுபதிகம் உ -ஆக ரு-அதற்குத் தென்கிழக்கு உ-கடிகையில்.

அச. திருஊலூர் எ-து பசுபதீச்சுரம் சுவாமி பசுபதீசுரர் அம்மன் மங்களநாயகி பிரமதீர்த்தம் பசுபூசித்ததலம் திருஞா னபதிகம் க-அதற்கு வடக்கு ௩-கடிகையில்.

அரு. திருச்சத்திமுத்தம் சுவாமி சிவக்கொழுந்தீசுரர் அ ம்மன் பெரியநாயகி சூலதீர்த்தம் சிவபெருமானைப் பராசத்தி

தழுவி முத்தங்கொடுத்ததலம் திருநாவுபதிகம் க - அதற்குத் தெற்கு வ - கடிகையில்.

அசு. திருப்பட்டீச்சரம் சுவாமி பட்டீசுரர் அம்மன் பால்வளைநாயகி ஞானதீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகட்குச் சிவபெருமான் முத்துப்பந்தல் கொடுத்ததலம் மேற்சொல்லிய ஞானதீர்த்தத்தில் மார்கழி மாத அமாவாசையில் கருடதரிசனம் திருஞானபதிகம் க-அதற்குத் தென்கிழக்கு க-கடிகையில்.

அஎ, திருவாறைவடதளி எ-து திருப்பழையாறை சுவாமி சோமீசுரர் அம்மன் சோமகலாநாயகியம்மை தீர்த்தம் சிவகங்கை இதன் வடமேற்கொருகடிகையில் திருமேற்றளி யிருக்கின்றது வடதளியென்கிற தலம் இவ்விரண்டில் இன்னதென்று மதிக்கப்படவில்லை சுவாமி வடதளிநாதர் அம்மன் கௌரியம்மைசமணரால் மூடப்பட்ட சிவலிங்கப்பெருமானார் வெளிவந்தப்பர்சுவாமிகளுக்குத் தரிசனங் கொடுத்ததலம் இவ்விருதலத்திற்கும் திருநாவுபதிகம் க-அமர்நீதிநாயனார்முத்திஸ்தலம் அதற்குவடக்கு க-கடிகையில்.

அஅ. திருவலஞ்சுழி சுவாமி கற்பகேசுரர் அம்மன்பெரியநாயகி அறுபத்தாறுகோடி தீர்த்தம் திருஞானபதிகம் ௩-திருநாவுபதிகம் உ-ஆக ரு-அதற்குக்கிழக்கு ச-கடிகையில்

அகூ, திருக்குடமூக்கு எ-து கும்பகோணம் சுவாமி கும்பேசுரர் அம்மன் மங்களநாயகி கஉ-வருடத்துக்கொருதடவை சிங்கராசியிற் குருவருங்கால் மாசிமீ-மக நக்ஷத்திரத்தில் மகாமகதீர்த்தம் இதிற் காசிக்கங்கை வருகிறதென்றைதிகம் திருஞானபதிகம்-க-திருநாவுபதிகம்-௩-ஆக- உ-அதற்குக் கிழக்கு கால் கடிகையில்.

கூ0. திருக்குடந்தை கீழ்க்கோட்டம் எ - து மடந்தையார் கோயிலென்றும் நாகேசுரன் கோயிலென்றும் வழங்குகின்றது சுவாமி மடந்தைபாகர் அம்மன் பெரியநாயகியம்மை மாமகதீர்த்தம் சபாபதி முகூர்த்தத்துக்கு ஆடவல்லவ

றென்று நாமம் திருநாவுபதிகம்-௧, அதற்குத் தென்கிழக்குக் கால் கடிகையில்.

௬௧. திருக்குடந்தைக்காரோணம் எ-து காசிவிசுவநாதர் கோயில் சுவாமி சோமநாதேசுரர் அம்மன் தேனார்மொழியம்மை தீர்த்தம் காசிபதி மாமகதீர்த்தத்திற்கு வடகரையிலிருக்கின்றது திருஞானபதிகம்-௧-அதற்குக்கிழக்கில்-௨-கடிகையில்.

௬௨. திருநாகேச்சுரம் சுவாமி சண்பகாரணியேஸ்வரர் அம்மன் குன்றுமுலைநாயகி நாகதீர்த்தம் நாகம்பூசித்ததலம் சேக்கிழார்நாயனார் வழிபட்டதலம் அவர்குடும்ப மிப்பவுமிருக்கின்றது திருஞானபதிகம்-௨- திருநாவுபதிகம்-௩-சுந்தரபதிகம்-௧-ஆக-௬-அதற்கு வடகிழக்கு-௨-கடிகையில்.

௬௩. திருவிடைமருதூர் எ-து மத்தியார்ச்சுனம் சுவாமி மருதப்பர் அம்மன் பெருநலமாமுலைநாயகி தீர்த்தம் கருணாதி காவேரி விருட்சம் மருது சிவபெருமான் வரகுணபாண்டியனுக்குப் பிரமஹத்தியைப்போக்கியவன்மனைவியாரையு முட்கொண்டதலம் திருஞானபதிகம்-௬-திருநாவு பதிகம் ௫-சுந்தரபதிகம்-௧-ஆக ௧௨- அதற்குக்கிழக்கு ௨- கடிகையில்

௬௪. திருத்தென்குரங்காடுதுறை எ-து ஆடுதுறை சுவாமி ஆபத்சகாயநாதர் அம்மன் பவளக்கொடியம்மை சகாயதீர்த்தம் சுக்கிரீபன் பூசித்ததலம் திருஞானபதிகம் ௧- திருநாவுபதிகம் ௧- ஆக-௨-அதற்குத்தெற்கு ௧-கடிகையில்

௬௫, திருநீலக்குடி எ-து தென்னலக்குடி சுவாமி நல்லநாயகேஸ்வரர் அம்மன் அழகாம்பிகை தீர்த்தம் வன்னிலம் திருநாவுபதிகம் ௧-அதற்குத்தென்கிழக்கு ௨-கடிகையில

௬௬, திருவைகன்மாடக்கோயில் வைகல் சுவாமி வைகனாதேசுவரர் அம்மை வைகலாம்பிகையம்மை மாடக்கோயில் சுவாமி கோமளேஸ்வரர் அம்மன் இளங்கோதையம்மை வைகல்வேறு மாடக்கோயில்வேறு இவ்விரண்டிற்கும் திருஞானபதிகம் ௧-அதற்குத்தென்கிழக்கு ௧- கடிகையில்

கூஎ, திருநல்லம் எ-து கோனேரிராசபுரம் சுவாமி மாமணீசுரர் அம்மன் மங்களநாயகி தீர்த்தம் கங்கை திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக உ:அதற்கு வடமேற்கு -உ கடிகையில

கூஅ, திருக்கோழம்பம் சுவாமி கோகிலேஸ்வரர் அம்மன் சௌந்தரியநாயகி மதுதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக உ- அதற்கு வடகிழக்கு க-கடிகையில்

கூகூ, திருவாவடுதுறை சுவாமி மாசிலாமணித் தியாகர் அம்மன் ஒப்பிலாமுலையம்மை கோமுத்திதீர்த்தம் விருட்சம் படராசு திருமூலநாயனார் வேதாகம சாரத்தை மூவாயிரம் பாவாகப்பாடி முடித்து முத்திபெற்ற தலம் அன்றி திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு பொற்கிழி யருளியதலம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் ரு-சுந்தரபதிகம் உ-ஆக அ-அதற்கு வடகிழக்கு ங-கடிகையில்

ள, திருத்துருத்தி எ-து குற்றாலம் சுவாமி உத்தரவேதீஸ்வரர் அம்மன் முகிழாம்பிகை தீர்த்தம் காவேரி சுந்தரதீர்த்தம் விருட்சம் குற்றால் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக ங - அதற்குத் தென்கிழக்கு க - கடிகையில்

ளக, திருவழுந்தூர் எ-து தேரழுந்தூர் சுவாமி வேதபுரீசர் அம்மன் சௌந்தராம்பிகை தீர்த்தம் சிற்றுமிர்தம் திருஞானபதிகம் க அதற்கு வடகிழக்கு கூ கடிகையில்

ளஉ, திருமயிலாடுதுறை எ;து மாயூரம் சுவாமி வதானியீசர் அஃது வள்ளலார் அம்மன் அபயப்பிரதாம்பிகை எ,து அஞ்சனாயகி தேவி சிவபெருமானை மயிலாய்ப்பூசித்து மணந்ததலம் காவேரி யிடபதீர்த்தம் துலாமாசம் முக்கியவிசேடம் மாவிருக்ஷம் திருஞானபதிகம் உ திருநாவுபதிகம் க- ஆக-ங அதற்கு வடகிழக்கு ௩ கடிகையில்

ளங, திருவிளநகர் சுவாமி துறைக்காட்டு வள்ளலார்

அம்மன் தோழியம்மை தீர்த்தம் காவேரி திருஞானபதிகம்-௧ அதற்குத்தெற்கு ௨ கடிகையில்

ா௪, திருப்பறியலூர் என்று பரசலூர் சுவாமி வீரட்டேசுரர் அம்மன் இளங்கொடியாள் தீர்த்தம் சந்திர புஷ்கரணி தக்கனுடைய யாகமழித்ததலம் இஃது அட்ட வீரட்டத்திலொன்று திருஞானபதிகம் ௧ அதற்கு வடகிழக்கு ௨ கடிகையில்

ா௫. திருச்செம்பொன்பள்ளி என்று செம்பொனார்கோயில் சுவாமி சொர்ணபுரீசுரர் அம்மன் சுகந்தவனநாயகி வீரபத்திர தீர்த்தம் திருஞானபதிகம் ௧ திருநாவுபதிகம் ௨ ஆக ௩ அதற்குவடகிழக்கு ௧ கடிகையில்

ா௬, திருநனிப்பள்ளி என்று புஞ்சை சுவாமி நற்றுணையப்பர் அம்மன் பருவதராசபுத்திரி யென்பது பார்வதி சொர்ண தீர்த்தம் திருஞானபதிகம் ௧ திருநாவுபதிகம் ௧ சுந்தரபதிகம் ௧ ஆக ௩ அதற்குக்கிழக்கு இரண்டரைகடிகையில்

ா௭, திருவலம்புரம் என்று பெரும்பள்ளம் சுவாமி வலம்புரிநாதேஸ்வரர் அம்மன் வடிவகிர்விழியாள் [பிரமதீர்த்தம் ஏரண்டமகாரிஷி திருவலஞ்சுழியில் காவேரியில் விழுந்தெழுந்து சிவபெருமானைப்பூசித்து முத்தியுற்றதலம் திருஞானபதிகம் ௧ திருநாவுபதிகம் ௨ சுந்தரபதிகம்-௧ ஆக ௪ அதற்குத்தென்மேற்கு ௧ கடிகையில்

ாஅ, திருத்தலைச்சங்காடு சுவாமி சங்கார்ண்ய ஈசுரர் அம்மன் சௌந்தரியநாயகிதீர்த்தம் காவேரி வில்வ விருட்சம் விஷ்ணுவுக்கு பாஞ்சசன்யமென்னுஞ் சங்கதனைச் சிவபெருமானளித்த தலம் திருஞானபதிகம் ௧ அதற்குத்தெற்கு ஒன்றரைகடிகையில்

ா௯, திருவாக்கூர் என்று தான்தோன்றிமாடம் சுவாமி சுயம்புநாதேஸ்வரர் அம்மன் வாணெடுங்கண்ணி அமுத தீர்த்தம், திருஞானபதிகம், ௧. திருநாவுபதிகம், ௧. ஆக, ௨. அதற்குத்தென்கிழக்கு இரண்டரைகடிகையில்.

௧௦. திருக்கடவூர் சுவாமி அமுதகடேசுரர் காலசங்கார

மூர்த்தி அம்மன் அபிராமியம்மை அமுததீர்த்தம் வில்வவிருட்சம் இஃது அட்டவீரட்டத்திலொன்று மார்க்கண்டேயர் செய்துவந்த சிவபூசைகண்டிரங்கிச் சிவபிரான் இயமனையுதைத்து அம்முனிவருக்கு என்றும்பதினாறுவயதாக விருக்கவென்றனுக்கிரகஞ்செய்ததலம், திருஞானபதிகம்-௩. திருநாவுபதிகம் ௬-சுந்தரபதிகம் ௧-ஆக ௰-அதற்குக்கிழக்கு ௨-கடிகையில்.

௧௧௧. திருக்கடவூர்மயானம்-சுவாமி பிரமபுரிஈஸ்வரர்-அம்மன் மலர்க்குழன்மின்னம்மை பங்குனிமீ அசுவினிநக்ஷத்திரம்வரும்போது கூபத்திற் காசிக்கங்கைவருகின்றது அப்பொழுது ஸ்நானவிசேஷம் அக்கங்கை காசிக்கங்கையையொத்த சோதனையுள்ளதாகவிருக்கும். திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம்-௧. சுந்தரபதிகம்-௧. ஆக-௩. அதற்குத்தென்கிழக்கு-௫-கடிகையில்.

௧௧௨. திருவேட்டக்குடி சுவாமி திருமேனியழகர் அம்மன் சாந்தநாயகி தீர்த்தம் சந்திரபுஷ்கரணி திருஞானபதிகம் ௧.அதற்குத்தென்மேற்கு-௪ கடிகையில்.

௧௧௩. திருத்தெளிச்சேரி-என்று சொயிற்பத்து சுவாமி பார்வதீஸ்வரர் அம்மன் சத்தியம்பாள். சத்திதீர்த்தம் திருஞானபதிகம்-௧-அதற்குத்தென்மேற்கு-௨-கடிகையில்.

௧௧௪. திருத்தருமபுரம் சுவாமி யாழ்மூரிநாதர் அம்மன் மதுரமின்னம்பிகை விண்டுதீர்த்தம் பிரமதீர்த்தம் திருஞானயாழ்மூரிப்பதிகம் ௧- அதற்குவடமேற்கு ௧௨ கடிகையில்.

௧௧௫. திருநள்ளாறு சுவாமி தருப்பாரணியேசுரர்- அம்மன் போகமார்த்தபூண்முலையம்மை இஃது சப்தவிடங்கத்தலத்திலொன்று-நகரவிடங்கர் உன்மத்தநடனம் நளதீர்த்தம் நளச்சக்கிரவர்த்திபூசித்து மனோரதமடைந்ததலம் மதுரையில் அக்கினியினின்றும் வேகாது சமணனைவென்ற போகமார்த்த பூண்முலையாளென்னும் திருஞானசம்பந்தசுவாமிகளருளிச்செய்த பச்சைப்பதிகமுள்ள தலம் திருஞானபதிகம் ௪-திருநாவுபதிகம்-௨ சுந்தரபதிகம்-௧ ஆக ௭-அதற்குவடமேற்கு-௪ கடிகையில்.

௧௧௬. திருக்கோட்டாறு சுவாமி ஐராவதேசுரர் அம்மன் வண்டமர்பூங்குழலி சூரியதீர்த்தம் திருஞானபதிகம் ௨- அதற்குத்தென்மேற்கு-௪-கடிகையில்.

௧௧௭. திருவம்பர் பெருந்திருக்கோயில்சுவாமி பிரமபுரிஈஸ்வரர் அம்மன் பூங்குழநாயகி தீர்த்தம் அன்னமாம்பொய்கை சிலந்திச்சோழமகாராஜாவுக்கு மலைக்கோலமாகக் காக்ஷிகொடுத்ததலம் மேற்படி சோழராஜாவனவர் திருவானைக்கா முதலம்பர் பெருந்திருக்கோயிலீறாக-௯௪- மாடக்கோயி திருப்பணிசெய்வித்தார்-மாடக்கோயில் எ-து கட்டுமலையும் யானைகள்செல்லக்கூடாதிருக்குஞ் சந்நிதியுமுடையதாகக் கட்டப்படுவது சோமாசிமாறநாயனார் முத்திஸ்தலம் திருஞானபதிகம்-௧-அதற்குமேற்கு-௧ கடிகையில்.

௧௧௮. திருவம்பர் மாகாளம் எ-து கோயிற்றிருமாளம் சுவாமி காளகண்டேசுரர் அம்மன் பட்சநாயகியம்மை தேவதீர்த்தம் சோமாசிமாறநாயனார் பிறந்து முத்தியடைந்ததலம் இப்போதாலயத்தில் மேற்படிநாயனார் யாகஞ்செய்த விடத்தில் தியாகேசனும் அம்மையு நீசத்திருமேனியுடன் சகடையு மதுக்குடமுங் கொண்டு வந்தபடியே திருவுருக்கொண்டிருக்கின்றனர் திருஞானபதிகம் ௩- அதற்குத் தென்மேற்கு ௩- கடிகையில்.

௧௧௯. திருமீயச்சூர் சுவாமி திருமுயற்சிநாதர் அம்மன் சௌந்தரியநாயகி தீர்த்தம் கங்காகூபம் திருஞானபதிகம்-௧ மேற்படிகோயில் வடக்குப்பிரகாரத்தில்.

௧௨௦. திருவிளங்கோயில் சுவாமி சகலபுவனேஸ்வரர் அம்மன் மேகலாம்பிகை அமிர்தநீர்த்தம் இது பேராளம் திருநாவுபதிகம் ௧- அதற்குத் தென்மேற்கு ௧- கடிகையில்.

௧௨௧. திருத்திலதைப்பதி எ-து கோயிற்பத்துமதிமுத்தம் சுவாமி முத்தீசுரர் அம்மன் பொற்கொடிநாயகி தீர்த்தம் சந்திரபுட்கரணி சந்திரன் பூசித்ததலம்காசிப்பட்டணத்தரசர்களிற் சித்ரோசி மகாராசா தருப்பணஞ் செய்ததலம் அவ்வா

சமுத்ரத்தமு மாலயத்தி லிருக்கின்றது திருஞானபதிகம்-௧ அதற்கு வடமேற்கு ௩-௧டிகையில்.

௧௨௨. திருப்பாம்புரம் சுவாமி பாம்பீசுவரர் அம்மன் வண்டார்பூங்குழலி திருஞானபதிகம் ௧ - அதற்கு மேற்கு-௧ கடிகையில.

௧௨௩. திருச்சிறுகுடி சுவாமி மங்களேஸ்வரர் அம்மன் மங்களநாயகியம்மை சூரியதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்மேற்கு ஒன்றரை கடிகையில்.

௧௨௪. திருவீழிமிழலை சுவாமி வீழியழகீசுரர் அம்மன் சுந்தராம்பிகை விஷ்ணுதீர்த்தம் சிவபெருமான் காத்தியாயன மகாரிஷியின் மகத்திற்றோன்றிய உமாதேவியாகியபெண்ணைத் திருமணம்புரிந்த மணவாளக்கோலத்துடன் சதாவாவெழுந்தருளி யிருக்கின்றார் இதனாற் பார்வதியாருக்குக் கார்த்தியாயனி யென்றொரு நாமமுமிருக்கின்றது விஷ்ணு நேத்திரார்ப்பனஞ் செய்து சக்கரம்பெற்றதலம் சம்பந்தசுவாமி ஆலயமும் அப்பர்சுவாமி ஆலயமும் வடக்குவீதியி லிருக்கின்றன மேற்படி சுவாமிகளிருவருக்குஞ் சிவபிரான் துற்பிக்ஷகாலம் நீங்கும்வரையில் பொற்காசு கொடுத்ததலம் விருக்ஷம் வீழி திருஞானபதிகம் ௧௫ - திருநாவுபதிகம் அ-சுந்தரபதிகம் ௧-ஆக-௨௪-அதற்குவடமேற்கு ௧-கடிகையில்.

௧௨௫. திருவன்னியூர் சுவாமி அக்கினிசுவரர் அம்மன் பார்வதிபம்மை அக்கினிதீர்த்தம் திருநாவுபதிகம் ௧ - அதற்குத் தென்மேற்கு ௨-கடிகையில்.

௧௨௬. திருக்கருவிலி சுவாமி சற்குணலீசுவரர் அம்மன் சர்வாங்கநாயகி திருநாவுபதிகம் ௧-அதற்குத் தென்மேற்கு ௩-கடிகையில்,

௧௨௭. திருப் பேணுபெருந்துறை என்ற திருப்பந்துறை சுவாமி சிவாநந்தநாதேசுவரர் அம்மன் மலையரசியம்மை சின்மயானந்த தீர்த்தம் திருஞானபதிகம் ௧ - அதற்கு மேற்கு ஒன்றரை கடிகையில்.

௧௨௮. திருநறையூர் சித்திச்சரம் சுவாமி சித்தநாதேசுரர் அம்மன் அழகாம்பிகை பிரமதீர்த்தம் திருஞானபதிகம் ௩- சுந்தரபதிகம் ௧- ஆக-௪ அதற்கு வடமேற்கு ௩- கடிகையில்.

௧௨௯. திருவரிசிற் கரைப்புத்தூர் எ-து அழகார்புத்தூர் சிறுவிலிபுத்தூர் சுவாமி படிக்காசளித்த வீசுவரர் அம்மன் அழகாம்பிகை வாணசதீர்த்தம் திருஞானபதிகம் ௧- திருநாவுபதிகம் ௧- சுந்தரபதிகம் ௧- ஆக-௩- அதற்கு வடமேற்கு-௧ கடிகையில்.

௧௩௦. திருச்சிவபுரம் சுவாமி பிரமபுரிநாயகேசுவரர் அம்மன் பெரியநாயகி சூரியதீர்த்தம் திருஞானபதிகம் ௩-திருநாவுபதிகம் ௧- ஆக. ௪ - அதற்குத் தெனமேற்கு ௧௰- கடிகையில்.

௧௩௧. திருக்கலயநல்லூர் எ-து சாக்கோட்டை சுவாமி அமுதகலாவீசுவரர் அம்மன் அமுதவல்லி நால்வேததீர்த்தம் சுந்தரபதிகம் ௧ - அதற்குத் தென்கிழக்கில் ௰ கடிகையில்.

௧௩௨. திருக்கருக்குடி எ-து மருதாந்தநல்லூர் சுவாமி சற்குணலிங்கேஸ்வரர் அம்மன் சருவாலங்காரமின்னம்மை எமதீர்த்தம் திருஞானபதிகம் ௧ - அதற்குத் தென்கிழக்கில் ௰ கடிகையில்.

௧௩௩. திருவாஞ்சியம் சுவாமி வாஞ்சிலிங்கேஸ்வரர் அம்மன் மங்களநாயகி கூபதீர்த்தம் திருஞானபதிகம் ௧- திருநாவுபதிகம் ௧ - சுந்தரபதிகம் ௧ - ஆக-௩- அதற்குக்கிழக்கு ௩ -கடிகையில்

௧௩௪. திருநன்னிலத்துப் பெருங்கோயில் சுவாமி பிரகாசநாதர் அம்மன் பிரகாசநாயகி சுந்தரபதிகம் ௧-அதற்குக் கிழக்கு ௫ -கடிகையில்.

௧௩௫. திருக்கொண்டீச்சரம் சுவாமி பசுபதீசுரர் அம்மன் சாந்தநாயகி திருநாவுபதிகம் ௨ - அதற்குத் தென்கிழக்கு ௧௰ -கடிகையில்.

௧௩௬. திருப்பனையூர் சுவாமி சௌந்தரியநாதர் அம்மன்

பெரியநாயகி அமுததீர்த்தம் திருஞானபதிகம் க - சுந்தரபதிகம் க - ஆக உ - அதற்குத்தெற்கு கஐ-கடிகையில்.

கஙள. திருவிற்குடி சுவாமி வீரட்டானேசுவரர் அம்மன் மைவார்குழலி இஃது அட்டவீரட்டத்திலொன்று சலந்தராசுரனை சம்மாரஞ்செய்ததலம் சந்திரசேகர ராலயத்திற்சக்ரமிருக்கின்றது திருஞானபதிகம் க -அதற்குவடகிழக்கு ௩-கடிகையில்.

கஙஅ. திருப்புகலூர் சுவாமி கோணற்பிரானுகிய அக்கினிசுவரர் அம்மன் கருந்தார்குழலி அப்பர்சுவாமிகள் சித்திரை மீ - சதையத்திற் சிவபெருமானைச்சிங்கமே உன்னடிக்கே போதுகின்றேனென்று திருத்தாண்டகத்திற்பாடி மகாலிங்கத்தி லயிக்கமான தலம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் செங்கல்லைப் பொன்னுக்கிக் கொடுத்ததலம் முருகநாயனார் திருவவதாரம் திருத்தொண்டு திருமாலைதொடுத்தல் அக்கினிதீர்த்தம் திருஞானபதிகம் உ - திருநாவுபதிகம் ரு - சுந்தரபதிகம் க- ஆக - அ - மேற்படி ஆலயவடபுறம்.

கஙகூ. வர்த்தமானீச்சுரம் சுவாமி வர்த்தமானீச்சுரர் அம்மன் மேற்படி கருந்தார்குழலி அக்கினிதீர்த்தம் திருஞானபதிகம் க - அதற்குத்தெற்கு க-கடிகையில்.

க௪0. திருவிராமநந்திச்சுரம் சுவாமி இராமலிங்கேசுரர் அம்மன் சருவார்குழலி மணிகங்கைதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத்தெற்கு கஉ-கடிகையில்.

க௪க. திருப்பயற்றூர் சுவாமி திருப்பயற்றீசுரர் அம்மன் காவியங்கண்ணி திருநாவுபதிகம் க-அதற்குவடகிழக்கு ௩ - கடிகையில்.

க௪உ. திருச்செங்காட்டங்குடி எ-று கணபதிச்சுரம் சுவாமி கணபதீசுரர் அம்மன் திருக்குழன்மாது கணபதி பூசித்ததலம் சிவபெருமான உட்சாயா (சு,ல் ஒன்றுகிய மதச்சதத்

தழுவி வயிரவ வேடங்கொண்டு சிறுத்தொண்டநாயனரது பிள்ளையைக் கறியமுதுபடைக்கச்செய்துமேற்படிபிள்ளையை யெழுப்பி நாயனருக்கு இடபவாகனரூடரா யெழுந்தருளிக் காட்சிகொடுத்ததலம் அம்முகூர்த்தத்திற்கு உருத்திராபதி யென்றொரு நாமமுண்டு சத்திதீர்த்தம் திருவாத்திவிருட்சம் திருஞானபதிகம் உ-திருநாவுபதிகம் க-ஆக. ங-அதற்குவடகிழக்கு க-கடிகையில்.

கசங. திருமருகல் சுவாமி மாணிக்கவண்ணேசுரர் அம்மன் வண்டுவார்குழலி திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் ஒரு செட்டிபிள்ளைக்கு விடந்தீர்த்ததலம் விடந்தீர்த்தபிள்ளையார் சிவகங்கைதீர்த்தம் வன்னிவிருக்ஷம் திருஞானபதிகம் உ-திருநாவுபதிகம் ச-ஆக. ங-அதற்கு வடகிழக்கு க-கடிகையில்.

கசச. திருச்சாத்தமங்கை எ-து கோயிற்றிருச்சாத்த மங்கை சுவாமி மாந்திசுரர் அம்மன் தையலாம்பிகை பிரம்தீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத்தென்கிழக்கு கக-கடிகையில்.

கசரு. திருநாகைக்காரோணம் எ-து திருநாகப்பட்டணம் சுவாமி ஆதிபுராணேசுரர் அம்மன் நீலாயதாட்சி சுந்தரவிடங்கத்தியாகர் இஃது சப்தவிடங்கத் தலத்திலொன்று அலேபேனடனம் சாலீசுக மகாராசாவானவர் தேவேந்திரனுக்கு இடையூறியற்றிய சம்பாசூரன் முதலிய அசுரர்களை வதஞ்செய்து அத்தேவராஜனிடத்திலிருந்து அச்சுந்தரவிடங்கரைச் சிவபெருமான் றிருவருளாற் பெற்றுவந்து பிரதிட்டைசெய்தது காசியிலிருந்து புண்டரீக மகாரிஷியானவர் சாமகோடிபீடமாகிய காஞ்சிபுரத்திலும் கும்பகோணத்திலும் மூன்று காரோணப் பிரதிட்டைசெய்து பூசையாற்றி (கூசது) வருடமுஞ்சென்று தானினைத்தபடி முடிவுருது மயங்குங்காலையில் கண்ணுவமுனிவர்தோன்றி அருள்செய்த பிரகாரம் வந்து தேவதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மேலக்காரோணம் பிரதி

ட்டைசெய்து பூசித்து ஆதிபுராணேசுரரைத்தரிசித்து வருங் காலையில் இரண்டுதடவையில காட்சிகொடுத்து மூன்றாந்தடவையில்அவ்வாதிபுராணலிங்கத்தில் காயத்துடன் மேற்படி மகாரிஷியை ஆரோகணஞ்செய்துகொண்டார் அதுமுதல் ஆதிபுராணேசுரர்க்கு காயாரோகணேசுரரென்ற திருநாமமுமுடையது தீர்த்தங்கள் தேவதீர்த்தம் சர்வதீர்த்தமென்பது புண்டரீகதீர்த்தம் அக்கினிதீர்த்தமாகிய காசதீர்த்தம் பிரமதீர்த்தம் முனிதீர்த்தம் வச்சிரதீர்த்தம் முதலிய தீர்த்தங்களுமுண்டு நாகராசாமுதலிய அனேகர்பூசித்ததலம் மாவிருட்சம் அதிபத்தநாயனார் முத்தியுற்றதலம் திருஞானபதிகம் ௨-திருநாவுபதிகம் ௪-சுந்தரபதிகம் ௧-ஆக. ௭-அதற்குமேற்கு ௧௨-கடிகையில்.

௧௪௬. திருச்சிக்கல் சுவாமி வெண்ணெலிங்கேசுரர் அம்மன் வேனெடுங்கண்ணி தீர்த்தம் பாற்குளம் விருக்ஷம் குடைசம்மல்லிகை வசிஷ்டர் காமதேனுமுதலிய பூசித்ததலம் சிங்காரவேலவர் சூரனைவிரட்டிவந்து சம்மாரஞ்செய்தவிடமென்றுஞ் சொல்லுவார்கள் இப்போதும் கந்தசஷ்டி உற்சவம் வெகுமேம்பாட்டுட நடக்கின்றது திருஞானபதிகம் -௧ அதற்குமேற்கு மூன்றரை கடிகையில்.

௧௪௭. திருக்கீழ்வேளூர் சுவாமி அக்ஷயலிங்கேஸ்வரர் அம்மன் வனமுலைநாயகி அகஸ்தியமகாரிஷிக்கு வலதுதிருவடி தரிசனங்காட்டியதலம் சபாபதி முகூர்த்தம் சிவஞானதீர்த்தம் இலந்தைவிருட்சம் திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௧-ஆக-௨-அதற்குத்தெற்கு-௨-கடிகையில்.

௧௪௮. திருத்தேவூர் சுவாமி தேவபுரீசர் அம்மன் மதுரபாஷணி தேவதீர்த்தம் விருட்சம் வாழை திருஞானபதிகம் ௨ - அதற்குவடமேற்கு ௬-கடிகையில்.

௧௪௯. திருப்பள்ளியின்முக்கூடல் சுவாமி முக்கோணேசுரர் அம்மன் மைமேவுகண்ணி திருநாவுபதிகம் ௧-அதற்குத்தென்மேற்கு ௨-கடிகையில்.

௧௫௦. திருவாரூரறநெறி சுவாமி அகிலேசுரர் அம்மன் புவனேஸ்வரி திருநாவுபதிகம் ௨-அவ்வாலயவடமேற்கில்.

௧௫௧. திருவாரூர் மூலட்டானம் சுவாமி வன்மீகத்தியாகேசுரர் அம்மன் அல்லியங்கோதை மநுவுக்கநுக்கிரகம் பண்ணினவர் இலக்குமிபூசித்து மங்கிலியம்பெற்றதலம் சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு திருத்தொண்டர் தொகைபாடும்பொருட்டு தில்லைவாழந்தனர்தமடியார்க்குமடியேனென்று முதன்மொழியெடுத்துக்கொடுத்தும் பரவைநாச்சியாருடநீரப்பாதியிரவிற்றூதுசென்றும் ஆட்கொண்டதலம்சப்தவிடங்கத்தலத்திலொன்று வீதிவிடங்கர்அசபாநடனம் இஃது முசுகுந்தச்சக்கிரவர்த்தி பிரதிட்டை கமலாலயதீர்த்தம் சங்குதீர்த்தம் பாதிரிவிருட்சம் திருஞானபதிகம்-௫-திருநாவுபதிகம்-௨௧-சுந்தரபதிகம் - ௮-ஆக. ௩௪-மேற்படி ஆலயத்தின் மகாரதநிலைக்குச் சமீபமாகத் தென்மேற்கில்.

௧௫௨. பரவையுண்மண்டளி என்று தலாநயினார் கோயில் சுவாமி பரவையுண் மண்டலேஸ்வரர் அம்மன் பஞ்சின் மெல்லடியாள் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குக் கண்கொடுத்த தலம் சுந்தரபதிகம் ௧-அதற்குத்தென்மேற்கு ௪௫-கடிகையில்.

௧௫௩. திருவிளமர் சுவாமி பதஞ்சலிமனோகரவீசுரர் அம்மன் யாழின்மொழியம்மை அக்கினிதீர்த்தம் இதிற்பதஞ்சலி வியாக்கிரமபாத ரிருக்கின்றார்கள் திருஞானபதிகம் ௧-அதற்குவடமேற்கு ௩-கடிகையில்.

௧௫௪. திருக்கரவீரம் என்று கரையபுரம் சுவாமி கரவீரேஸ்வரர் அம்மன் பிரத்தியக்ஷமின்னம்பிகை பிரமதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்கு வடமேற்கு ௬-கடிகையில்.

௧௫௫. திருப்பெருவேளூர் என்று காடவேரயன்பேட்டை சுவாமி பிரியாஈஸ்வரர் அம்மன் மின்னனையாள் மூசிகதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குமேற்கு ௨௦-கடிகையில்.

௧௫௬. திருத்தலையாலங்காடு என்று தலைச்சங்காடு சுவாமி

ஆடவல்லாசுரர் அம்மன் திருமடந்தை சங்கதீர்த்தம் திருநாவு பதிகம்-க அதற்குமேற்கு மூன்றரைகடிகையில்.

கருஎ திருக்குடவாயில் சுவாமி கோணேஸ்வரர் அம்மன் பெரியநாயகி அமுததீர்த்தம் திருஞானபதிகம் உ-அதற்குவடமேற்கு க-கடிகையில்.

கருஅ திருச்சேறை என்பது உடையார்கோவில் சுவாமி சென்னெறியப்பர் அம்மன் ஞானவல்லி மார்க்கண்டதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம்-உ ஆக-௩ அதற்குத் தென்கிழக்கு க-கடிகையில்

கருகூ திருநாலூர்மயானம் என்பது நாத்தூர் சுவாமி பல்லவனீஸ்வரர் அம்மன் பெரியாம்பிகை சந்திரதீர்த்தம் நாலூர்வேறுமயானம்வேறு இரண்டுக்கும் திருஞானபதிகம் க-அதற்குத்தென்மேற்கு ௩-கடிகையில்

கசு0 திருக்கடவாய்க்கரைப்புத்தூர் சுவாமி சொர்ணபுரீஸ்வரர் அம்மன் சிவாம்பிகை திருநாவுபதிகம் க-அதற்குத் தெற்கு உ-கடிகையில்

கசுக திருவிரும்பூளை என்பது ஆலங்குடி சுவாமி காசியாரண்ணிய வீசுரர் அம்மன் ஏலவார்குழலி தெக்ஷணாமூர்த்தம் தீர்த்தம் அமுதப்பொய்கை திருஞானபதிகம் க-அதற்குமேற்கு-௩-கடிகையில்

கசுஉ திருவரதப்பெரும்பாளி என்பது அரித்துவாரமங்கலம் சுவாமி பதாளீசுரர் அம்மன் அலங்காரநாயகி பிரமதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குமேற்கு க-கடிகையில்

௩சு௩. திருவவளிவணல்லூர் சுவாமி சாக்ஷிநாயகேசுரர் அம்மன் சவுந்தரநாயகி குருக்கள் பெண்ணுக்குச் சாட்சிசொன்ன இடபாருடமூர்த்த மிருக்கின்றது தீர்த்தம் சந்திரபுஷ்கரணி திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக உ-அதற்குத்தென்மேற்கு எ0-கடிகையில்

௩சுச. திருப்பருதநியமம் என்பது பருத்தியப்பர் கோயி

ல் சுவாமி பருத்தியப்பவீசுரர் அம்மன் மங்களநாயகி சூரியன் பூசித்ததலம் சூரியதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குவடகிழக்கு ௮-கடிகையில்.

௱௬௫. திருவெண்ணி எ-து கோவில்வெண்ணி சுவாமி வெண்ணிநாயகாசுரர் அம்மன் அழகியநாயகியம்மை திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௨-ஆக ௩ - அதற்குத்தென்கிழக்கு ௩-கடிகையில்.

௱௬௬. திருப்பூவனூர் சுவாமி புஷ்பவனயீசுரர் அம்மன் கற்பகவல்லி கருங்குழிதீர்த்தம் திருநாவுபதிகம் ௧-அதற்குத் தென்கிழக்கு ௪-கடிகையில்.

௧௬௭, திருப்பாதாளேச்சுரம் எ-து பாம்பணி சுவாமி சர்ப்பபுராசுவரர் அம்மன் அமுதநாயகி நாகதீர்த்தம் இஃது மன்னூர்கோவிலுக்கு வடக்கு ஒன்றரைக்கடிகையி லிருக்கின்றது இத்தலத்தினது பெயரினாற்றான் அவ்வாற்றுக்கும் பாம்பணியென்று பெயரிருக்கிறதாக ஐதிகம் திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்கிழக்கு ௧௦-கடிகையில்.

௧௬௮, திருக்களர் சுவாமி களர்முலையீஸ்வரர் அம்மன் அழகேஸ்வரி துருவாசமகாரிஷிக்கு நடனதெரிசனம் கொடுத்த நடேசமூர்த்தமும் அவ்விருடிமூர்த்தமும் அவ்வாலயத்தி லிருக்கின்றது துருவாசதீர்த்தம் திருஞானபதிகம் -௧-அதற்குத்தென்கிழக்கு ௨-கடிகையில்.

௧௬௯. திருச்சிற்றேமம் எ-து எழிலூர்சேமம் சுவாமி பொன்வைத்தநாயகர் அம்மன் அகிலாண்டவல்லி சொர்ணதீர்த்தம் திருஞானபதிகம் ௧- அதற்குத் தென்மேற்கு ௧௦ - கடிகையில்.

௧௭௦. திருவுசாத்தானம் எ-து திருக்கோயிலூர் சுவாமி மந்தாபுரீஸ்வரர் அம்மன் பெரியநாயகியம்மை நின்மலதீர்த்தம் இஃது முத்துப்பேட்டைக்கு வடக்கு ஒன்றரைக்கடிகையிலிருக்கின்றது திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்கிழக்கு ௭-கடிகையில்.

௧௭௧. திருவிற்பாவனம் சுவாமி சற்குணநாயகேஸ்வரர் அம்மன் மங்களநாயகியம்மை குசுமதீர்த்தம் திருஞானபதிகம் ௧- அதற்குக்கிழக்கு முக்கால் கடிகையில்.

௧௭௨. திருக்கடிக்குளம் எ-து கற்பகனார்கோயில் சுவாமி கற்பகேஸ்வரர் அம்மன் சௌந்தரநாயகி திருஞானபதிகம்-௧ அதற்குவடகிழக்கு ௧௦-கடிகையில்.

௧௭௩. திருத்தண்டலை நீணெறி சுவாமி நீணெறிநாதர் அம்மன் ஞானாம்பிகை ஓமகதீர்த்தம் இத்தலத்துக் கரைக்கடிகையிலிருக்குங் கணமங்கலத்தில் பிறந்த அரிவாட்டாயநாயனார் சிவபெருமானுக்குச் செந்நெலரிசி மாவடு செங்கீரைமுதலான பலவகை நிவேதித்துப் பணிவிடைசெய்து முத்தியடைந்ததலம் இப்போதவ்விடங் கமராயிருக்கின்றது இத்தலத்தில் மாவடு நிவேதனம் முக்கியவிசேடம் திருஞானபதிகம் ௧-அதற்கு மேற்கு ௫-கடிகையில்.

௧௭௪. திருக்கோட்டூர் சுவாமி கொழுந்தீஸ்வரர் அம்மன் மதுரவசனாம்பிகை அமுதநீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குமேற்கு ௭௨-கடிகையில்.

௧௭௫, திருவெண்டுறை சுவாமி வெண்டுறைநாதேஸ்வரர் அம்மன் வேல்நெடுங்கண்ணி அகத்தியதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குவடகிழக்குக் கால் கடிகையில்.

௧௭௬, திருக்கொள்ளம்பூதூர் எ-து செல்லூர் திருக்களம்பூர் சுவாமி வில்வவனேஸ்வரர் அம்மன் சௌந்தராம்பிகை பிரமதீர்த்தம் வில்வவிருக்ஷம் ஐப்பசிமாசம் அமாவாசையில் திருஞானசம்பந்த சுவாமிகளுக்கு நம்பனென்கிற சுவாமி ஓடம்விட்டு வெட்டாறுகரையேற்றி இடபாரூடராய்க் காக்ஷி கொடுத்ததலம் திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்கிழக்கு பத்துகடிகையில்.

௧௭௭, திருப்பேணா எ-து ஓகைப்பேரை சுவாமி சகதீசுர் அம்மன் பெண்ணமுர்தநாயகி அக்கினிதீர்த்தம் திருநாவுபதிகம் ௧-அதற்குத்தெற்கு ௩-கடிகையில்

கஎஅ, திருக்கொள்ளிக்காடு சுவாமி திவண்ணநாதர் அம்மன் பஞ்சின்மெல்லடிநாயகி திருஞானபதிகம் க-அதற்குக் கிழக்குக் கால்கடிகையில்

கஎகூ, திருத்தெங்கூர் சுவாமி வெள்ளிமலையப்பார் அம்மன் பெரியாம்பிகை சிவகங்கைதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குவடகிழக்கு கால்கடிகையில்

கஅ0. திருநெல்லிக்கா சுவாமி நெல்லிவனேஸ்வரர் அம்மன் மங்களேஸ்வரி பிரமதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குவடக்கு ங-கடிகையில்

கஅக, திருநாட்டியத்தான்குடி சுவாமி கரிநாதேஸ்வரர் அம்மன் மலர்மங்கைநாயகி சூரியதீர்த்தம் சுந்தரபதிகம் க-அதற்குத்தென்கிழக்கு ச-கடிகையில்

கஅக. திருக்காறுயில் எ-து திருக்காறைவாசல் சுவாமி கண்ணாயிரநாதர் அம்மன் கைலாயநாயகி இஃது சப்தவிடங்கத்தலத்திலொன்று ஆதிவிடங்கர் குக்குடநடனம் பிரமதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குக்கிழக்கு உ-கடிகையில்

கஅங, திருக்கன்றாப்பூர் சுவாமி நடுதறியப்பார் அம்மன் மாதுநாயகி ஒரு பிராமணப் பெண்ணுக்காக நடுதறியிற் சுவாமி உற்பத்தியானதலம் ஞானதீர்த்தம் திருநாவுபதிகம் க-அதற்குத்தெற்கு ஒன்றரைகடிகையில்

கஅச.திருவலிவலம் சுவாமி மனத்துணைநாதர் அம்மன் வாளையங்கண்ணி சக்கரதீர்த்தம் திருஞானபதிகம் உ - திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக ச அதற்குத் தென்மேற்கு உ - கடிகையில்

கஅரு, திருக்கச்சினம் சுவாமி கச்சினாயகேஸ்வரர் அம்மன் வெள்வளைநாயகி இந்திரதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குக்கிழக்கு ங-கடிகையில்

கஅசு, திருக்கோளிலி எ-து திருக்குவளை சுவாமி கோளிலிநாதர் அம்மன் வண்டமர்பூங்குழலி இஃது சத்தவிடங்

சத்தலத்தி லொன்று அவனிவிடங்கத்தியாகர் வண்டோடன ம் பிரமதீர்த்தம் பரவைநாச்சியாருக்காகக் குண்டையூர்க் கி ழாவரிடத்தில் வாங்கியநெற்களைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கேட்டுக்கொண்டபடி சிவபெருமான் பூதங்களைக்கொண்டு திருவாரூரிற் சேர்ப்பித்ததலம் திருஞானபதிகம் க-திருநாவு பதிகம் உ-சுந்தரபதிகம் க-ஆக-ச-அதற்குத் தென்கிழக்கு இ ரண்டரைக்கடிகையில்

கஅஎ, திருத்தென்றிருவாய்மூர் சுவாமி வாய்மூரடிகளீசு வரர் அம்மன் பாலினும் நன்மொழிநாயகி இஃது சப்தவிட ங்கத்தலத்திலொன்று நீலவிடங்கர் கமலநடனம் திருஞான சம்பந்தசுவாமிகள் பாடியருள திருநாவுக்கரசு சுவாமிகளுக் குச் சிவபெருமான் றரிசனங்கொடுத்ததலம் சூரியதீர்த்தம் தி ருஞானபதிகம் க-திருநாவுபதிகம் உ-ஆக ங-அதற்குத்தென் கிழக்குபதினேழரைக்கடிகையில்

கஅஅ, திருமறைக்காடு எ-து வேதாரணியம் சுவாமி மறைக்காட்டீசுரர் அம்மன் யாழைப்பழித்த மொழியாள் இஃது சப்தவிடங்கத் தலத்திலொன்று புவனி விடங்கர் அமூர்தநடனம் வேதம் பூசித்ததலம் மறையாற் றிருக்காப்பு செய்தகதவைத் திருநாவுக்கரசு சுவாமிகளுந் திருஞானசம் பந்த சுவாமிகளுந் திறக்கவு மடைக்கவும் பாடியதலம் தீர்த்த ம் மணிகர்ணிகை வேதநதி விருக்ஷம் வன்னி திருஞானப திகம் ச- திருநாவுபதிகம் ரு சுந்தரபதிகம் க இன்னமொரு பதிகம் மதிக்கப்படவில்லை ஆக கக-அதற்குத்தெற்கு க-க டி கையில்

கஅசு. திருஅகத்தியாம்பள்ளி சுவாமி அகத்தீஸ்வரர் அம் மன் மங்கைநாயகி எனவும் பாகம் பிரியாளென்றும்பெயர் அ கத்தியர் பூசித்ததலம் அக்கினிதீர்த்தம் திருஞானபதிகம் க- அதற்குத்தெற்கு ரு-கடிகையில்.

சகூ0. திருக்கோடிகுழகர் எ-து குழவர்கோயில் சுவாமி அமூர்தகடேசுரர் அம்மன் மையார்தடங்கண்ணி அமுததீர்த்

தம் சுந்தரபதிகம் ௧-ஆ௬. சோழவளநாட்டுத் திருச்சிவதலம் ௧௯௦-ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம். ஈழநாடு.

௧௯௧. திருக்கோணமாமலை சுவாமி கோணேஸ்வரர் அம்மன் மாதுமையாள் இது கைலாயத்தினது கொடுமுடிகளிலொன்று திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்கிழக்கு.

௧௯௨. திருக்கேதீச்சரம் சுவாமி கேதீஸ்வரர் அம்மன் கௌரியம்பிகை கௌரிதீர்த்தம் திருஞானபதிகம் ௧-சுந்தரபதிகம் ௧-ஆக.௨-ஆக.ஈழநாட்டுத் திருச்சிவதலம் ௨-ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம். பாண்டி நாடு.

௧௯௩. திருவாலவாய் என்னும் மதுரை சுவாமி சொக்கநாதஈசுவரர் அம்மன் மீனாக்ஷியம்மை இது மதுராமாநகர் சமஷ்டிவிச்சாபுரம் நான்மாடக்கூடல் திருவாலவாய் கடம்பவனம் துவாதசாந்தஸ்தலம் எனப்பல நாமங்களுடைய தலம் கற்பூரசுந்தரர் கலியாணசுந்தரர் மீனாக்ஷிசுந்தரர் சண்பகச்சுந்தரர் கடம்பவனச்சுந்தரர் பழிக்கஞ்சியசுந்தரர் ஆலவாய்ச் சுந்தரர் சோமசுந்தரர் எனப்பலபெயருஞ் சொக்கலிங்க மூர்த்திக்கேயுண்டு அம்மூர்த்தி அத்தலம்புரக்கும் பாண்டியர்களைவழியடிமைகொண்டதுமன்றிக் கைலாயத்திருந்து பிரமதகணங்களுடன் வந்து இராசராசேஸ்வரியாகிய தடாதகைப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்தச் செங்கோலைக் கையிற்றாங்கிச் சோமசுந்தர பாண்டியனெனத் திருப்பெயர்பூண்டு அரசுசெய்தும் வெள்ளியம்பலத்தாடியும் எழுகடலழைத்தும் எல்லாம் வல்லசித்தராய்வந்து கல்லானைக்குக் கரும்பூட்டியும் மாணிக்கம விறகுவளையல்விற்றும் வரகுணபாண்டியனுக்குச் சிவலோகங் காட்டியும் கான்மாறி நடித்தும் வேதத்திற்குப் பொருளுரைத்தும் பிட்டுக்குமண்சுமந்து பாண்டியன்கைப்பிரம்படிபட்டும் நரியைப்பரியாக்கியும் பரியைநரியாக்கியும் இவ்வாறுக அறுபத்துநான்கு திருவிளையாட வாடியருளியதலம் நெடுமாறநாயனார் குலச்சிறைநாயனார் மங்கையர்க்கரசியார் சிவபி

ராஜனை வழிப்பட்டுச் சைவப்பயிலை வளர்ந்ததலம் திருஞானசம்பந்தப் பிள்ளையார்சமணர்களைக் கழுவேற்றியதலம் தீர்த்தம் பொற்றாமரை எழுகடல்வைகை முதலியன கடம்பவிருட்சம் திருஞானபதிகம் ௬-திருநாவுபதிகம் ௨-ஆக.௧௧- அதற்குவடக்கு ௧-கடிகையில்.

௧௬௪. திருவாப்பனூர் எ-நு திருவாப்புடையார் கோயில் சுவாமி ஆப்பனூரப் பேசுவரர் அம்மன் அம்பிகையம்மை இராசாவின் மந்திரிக்காக ஆப்புசிவலிங்க மானதலம் திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்மேற்கு ௪-கடிகையில்.

௧௬௫. திருப்பரங்குன்றம் சுவாமி பரங்கிரிநாயகேசுவரர் அம்மன் ஆவிடைநாயகி சுப்பிரமணியர் தெய்வானையை மணஞ்செய்த தலம் தீர்த்தம் சரவணப்பொய்கை திருஞானபதிகம் ௧-சுந்தரபதிகம் ௧-ஆக. ௨-அதற்குவடமேற்கு ௮- கடிகையில்.

௧௬௬. திருவேடகம் சுவாமி ஏடகநாதேசுரர் அம்மன் மாதேவியம்பாள் வேகவதிதீர்த்தம் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சமணருடன் வாதில் வைகையில்விட்ட ஏடெதிரேறியதிருப்பாசுரம் வெளிப்பட்டதலம் திருஞானபதிகம் ௧-அதற்குவடகிழக்கு ௩௦-கடிகையில்.

௧௬௭. திருக்கொடுங்குன்றம் எ-நு பிரான்மலை சுவாமி கொடுங்குன்றீசுவரர் அம்மன் குயிலமுதநாயகி மங்கைநாயகர் மணவாளக்கோலம்சுந்தரதீர்த்தம் பேர் மதிக்காமணிற்கும் விருட்சம் கார்த்திகையீ-கார்த்திகைநட்சத்திரத்தில் பருவதவுச்சியில் திபதரிசனம் திருஞானபதிகம் ௧-அதற்குத் தென்கிழக்கு ௧௫-கடிகையில்.

௧௬௮. திருப்புத்தூர் சுவாமி பக்தீசுவரர் அம்மன் சிவகாமியம்மை கருடதீர்த்தம் சீதளிதீர்த்தம் திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௧-ஆக-௨-அதற்குத் தென்கிழக்கு ௩௨-கடிகையில்.

கசுகூ. திருப்புனவாயல் சுவாமிபழம்பதிநாதேசுரர் அம்மன் கருணைநாயகி தீர்த்தம் கருணாநதி திருஞானபதிகம் க-சுந்தர பதிகம் க-ஆக உ-அதற்குத் தென்கிழக்கு (ருச) கடிகையில.

உ௱. திருவிராமேச்சுரம் எ-து இராமேஸ்பரம் சுவாமி இராமலிங்கஈசுவரர் பருவதவர்த்தனியம்மை தீர்த்தங்கள் தனுக்கோடிமுதலிய அறுபத்துநான்குள்ளன இராமசுவாமி இராவணன்முதலிய அசுவேதியரைக்கொன்ற பிரமஹத்திநீங்க இராமலிங்கப்பிரதிட்டைபண்ணி சிவபிரானது திருவருட்பெற்றதலம் ஆகையாற் றலத்திற்குஞ் சிவபெருமானுக்கும் அப்பெயரெய்திற்று திருஞானபதிகம் உ- திருநாவுபதிகம க- ஆக-ங அதற்குவடமேற்கு(சடு) கடிகையில்.

உ௱க. திருவாடானை சுவாமி ஆடானைநாதர் அம்மன் அம்பாயிரவல்லி ஆதிபூசித்ததலம் திருஞானபதிகம் க- அதற்கு மேற்கு உ0-கடிகையில்.

உ௱உ. திருக்கானப்பேர் எ-து காளையார்கோவில் சுவாமி காளைசுரர் அம்மன் மகாமாயி பொன்விம்ப மிராசாவானதீர்த்தம் புட்பவனதீர்த்தம் யானைமடுவென்னுந்தீர்த்தம் திருஞானபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக-உ-அதற்குமேற்கு கசு-கடிகையில்.

உ௱௩. திருப்பூவணம் சுவாமி பூவண்ணநாதேசுரர் அம்மன் மின்னும்பிகை தீர்த்தம் வைகை சொக்கலிங்க மூர்த்தி பொன்னனையாளென்னுந் தாசிக்கு ரசவாதஞ்செய்துகொடுத்த அப்பொன்னாலாய திருவுருவைக்கண்ட பொன்னனையாள் அச்சோவழகென்று வலது கபோலத்தைக் கிள்ளிமுத்தமிட்டாள் அக்கிள்ளின்னமு மிருக்கின்றதனாலம்முநூர்த்தத்துக்கு அச்சோ அழகென்று திருநாமமுண்டு திருஞானபதிகம் உ திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக-ச- அதற்குத் தென்மேற்கு-கடு-கடிகையில்.

உ௱ச. திருச்சுழியல் சுவாமி திருமேனிநாதேஸ்வரர் அம்மன் துணைமாலையம்பிகை பிரளயதீர்த்தம் சுந்தரபதிகம்-க- அதற்குத்தென்மேற்கு ௱ -கடிகையில

௨௱௫ திருக்குற்றாலம் சுவாமி குறும்பலாவீசுரர் அம்மன் குழல்வாய்மொழியாள் சித்திராநதி தீர்த்தம் சிவசொரூபமாகிய குறும்பலாவுஞ் சித்திர சபையையு முடையதலம் அகஸ்தியமகாமுனி கைலாயத்திலிருந்து பொதியாசலத்துக் கெழுந்தருளினபோது விஷ்ணுமூர்த்தத்தைச் சிவலிங்கமாக்கிய தலம் திருஞானபதிகம் ௨-அதற்குத் தென்கிழக்கு-௨௫-கடிகையில்

௨௱௬. திருநெல்வேலி சுவாமி வேணுவனேஸ்வரர் சாலிவாடீஸ்வரர் நெல்லுக்கு வேலிகட்டி நெல்லையப்பர் அநவரதநாதர் அம்மன் காந்திமதி தாம்பிரசபை தீர்த்தம் தாம்பிரவன்னி பொற்றாமரை கம்பாநதி முதலியன திருஞானபதிகம் ௧-ஆக பாண்டி-௧௪-ம்

முற்றிற்று

திருச்சிற்றம்பலம்.

௨

சேரநாடு அல்லது

மலைநாடு.

கொச்சி மலையாளத்துக்கு வடக்கு-௧௬-கடிகையில்

௨௱௭. திருவஞ்சைக்களம் சுவாமி அஞ்சைக்களத்தீஸ்வரர் அம்மன் உமையாளம்மை தீர்த்தம் சிவகங்கை இதற்கு வடக்கு கொடுங்கோளூரில்சித்திரை மீ இடேவதியில் அவதரித்த கழறிற்றறிவாரென்னுஞ் சேரமான்பெருமானாயனார் குதிரையின்மேல்வந்து வெள்ளையானையின் மேற்சென்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளுடன் ஆடி மீ சுவாதியிற் கையிலாயத்திற்கெழுந்தருளியதலம் சுந்தரபதிகம் ௧-முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

௨

கொங்கு நாடு.

௨௱௮. திருஅவிநாசி சுவாமி அவிநாசியீஸ்வரர் அம்மன் பெருங்கருணைநாயகி தீர்த்தம்முதலை சுந்தரமூர்த்திசுவாமிகள்

புக்கொளியூர விநாசியென்னு மக்கிரகாரத்திற்குத் தென்புற மிருக்குஞ் சிற்றேரியில் மூன்றுவருடத்துக்கு முந்தி முதலை பிடித்துத்தின்ற பிள்ளையை மேற்படி ஏரியினீரில்லாக்காலத் தில் மேற்படிபிள்ளையின் பிதா அன்னை இவர்கள் வருத்தத் தைக்குறித்துந் தன்னுமத்தை நிலைநிறுததும்பொருட்டும் அடி மைத்திறத்தை வெளியிடுவதற்காகவும் சிவபெருமானடியார் வேண்டுவன வளிப்பதற்குச் சித்தமாய்க் காத்திருக்கின்றாரெ ன்பதை யறிவித்தற்குந் தமிழ்ப்பாட்டின் மகிமைதோற்றவும் பதிகமருளி ஏரிநிரம்ப நீர்பெருகச்செய்து அம் முதலையை ய ழைத்துப் பிள்ளையை உயிரும்வயதுங் குறைவுறு தமிழச்செ ய் தப்பிள்ளைக்கு உபநயனமுஞ் செய்வித்ததலம், இப்போது ம் அந்தவேரிக்கரையில் மேற்படி திருவிளையாடற்போ னடக் கும்படியாகிய குறிப்புக்களுடனாலய மிருக்கின்றது சுந்தரப திகம் ௧-அதற்குத்தென்கிழக்கு ௯-கடிகையில்.

உ௱௯. திருமுருகன்பூண்டி சுவாமி முருகேஸ்வரர் அம்ம ன் ஆவிடைநாயகி ஆவிடைதீர்த்தம் சிவபெருமான் பூதங் களை வேட்டுவராயனுப்பிச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பொருளை ப்பறித்து மறுபடிகொடுத்துப் பதிகம்பெற்றதலம் சுந்தரபதி கம் ௧-அதற்குவடகிழக்கு உ௫-கடிகையில்

உ௱௧0. திருநணா என்பது, பவானிகூடல் சுவாமி சங்கமு கநாதேஸ்வரர் அம்மன் வேதமங்கை தீர்த்தம் பவானிநதியு ங் காவிரிநதியுங்கூடுஞ்சங்கமம், திருஞானபதிகம்-௧ அதற்கு த்தெற்கு-௧0 கடிகையில்.

உ௧௧. திருச்செங்குன்றூர் எ-து, திருச்செங்கோடு சுவாமி அர்த்தநாரீஸ்வரர் அம்மன அர்த்தநாரீஸ்வரி மலையின்மேலிரு க்கின்றது, பிரிங்கிமகரிஷிக்காகவந்த அவதாரம், சுவாமி தி ருமேனிவிபூதிநிறம், திருவடியின்கீழ் கங்கை 'சங்குதீர்த்தம் திருஞானபதிகம்-௧ அதற்குததென்கிழக்கு-உ௫ கடிகையில்,

உ௧௨. திருவெஞ்சமாக்கூடல், சுவாமி விகிர்தேஸ்வரர், அம்மன் விகிர்தேஸ்வரி விகிர்தீர்த்தம் சுந்தரபதிகம்-௧ அத ற்குவடமேற்கு-௧௮ கடிகையில்.

உ௪௫. திருப்பாண்டிக்கொடுமுடி சுவாமி கொடுமுடிநாதேஸ்வரர்; அம்மன் பண்மொழிநாயகி தீர்த்தம் காவிரி இதிற்பழனி ஆண்டவருக்குத் திருமஞ்சனதீர்த்தந் தினங்காவடிகட்டியெடுத்துக்கொண்டுபோய் அடியார்க்கெளியரென்னும் நம்மிறைவரருள் குமாரவேளாகிய தெண்டாயுதபாணிக்கு அபிஷேகஞ்செய்கிறதுண்டு-திருஞானபதிகம்-க - திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம்-க ஆக ௩. அதற்குக்கிழக்கு ௧0- கடிகையில்.

உ௪௬. திருக்கருவூர் திருவாநிலை சுவாமி பசுபதிசுரர் அம்மன் கிருபாநாயகி திருஞானபதிகம்-க. கொங்குநாடு ஆக-எ௭-

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

௨

நடுநாடு அல்லது மகதநாடு.

உ௪௭. திரு அரத்துறை சுவாமி அரத்துறையப்பர் அம்மன் ஆனந்தநாயகி தீர்த்தம் வெள்ளாறு திருஞானசம்பந்த மூர்த்திசுவாமி மாறன்பாடியில் வந்திருக்கும்போது அரத்துறைக்கு மேற்கு முக்காற்கடிகை நெய்வாசலென்கின்ற திருநெல்வாயிலிலிருந்த பிராமணர்கள் சிவபெருமா னுத்தரவின்பிரகாரம் மேற்படி சுவாமிகளுக்கு முத்துச்சிவிகைமுதலிய திருச்சின்னங்கொடுத்ததலம். ஆதிததுறை காரியனூர் அதன்கிழக்குத் திருவாலத்துறை அதன்கிழக்குத் திருமாந்துறை அதன்கிழக்கு ஆடுதுறை அதன்கிழக்குத் திருவதிட்டத்துறை என்னுங் கிட்டக்குடி அதன்கிழக்கு அரத்துறை அதன்கிழக்குத் திருக்கைத்துறை இந்தத்துறை எழும் சப்தவிருடிகள் பூசைசெய்யவேண்டியதற்கு நீவாவென்று கூப்பிட்டதாக ஐதிகம் ஆனதால் நீவாநதியென்றும் அந்நீவாநதியே வெள்ளாறெனவும் வழங்குகின்றது. திருஞானபதிகம்-க-திருநாவுபதிகம்-க சுந்தரபதிகம்-௧ஆக-௩ அதன்வடகிழக்கு-௩-கடிகையில்.

உ௱௧௬. திருத்தூங்கானைமாடம் எ-து பெண்ணாடகம் சுவாமி சுடர்க்கொழுந்தீஸ்வரர் அம்மன் கடந்தைநாயகி சசவிமானம் பிரளயங்காத்தவீசுரர் தீர்த்தம் வெள்ளோதி கலிக்காமநாயனார் முத்திஸ்தலம் திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௧-ஆக ௨-அதற்குக்கிழக்கு ௧௨-கடிகையில்.

உ௱௧௭. திருக்கூடலையாற்றூர் சுவாமி நெறிகாட்டுநாயகர் அம்மன் புரிகுழலாம்பிகை சங்கு தீர்த்தம் வடமேற்கிலிருந்து மணிமுத்தாநதியுந் தென்மேற்கிலிருந்து நீவாநதியும் இரண்டும் கூடிக் கிழக்கேநோக்கின்றபடியாற் கூட்லையாற்றூ சென்றுரைப்பார்கள் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்புரம்பியமென்னுங்கிராமத்தினின்று எழுந்தருளி மேற்படி தலத்துக்குச் சமீபமாகச் செல்லுகின்ற வழித்தலத்தைவிட்டு விருத்தாசலத்துக்குச்செல்லுங் கருத்தினராய் நடக்கும் கானடவையிற் சிவபெருமான் ஒருபிராமணரென நிற்கக்கண்டு அய்யரே விருத்தாசலததுக்கேகு மார்க்கமெதுவென சிவபிரானுகிய அய்யரும் இக்கூடலையாற்றூர் மார்க்கமாச்செல்லுகின்ற தென்றழைத்துக் கொண்டுவந்து கூடலையாற் றூருக்குச் சமீபத்தில் விட்டு மறைந்தன ரதகண்டாராமைமேற்கொண்டு பாடியருளியதலம் சுந்தரபதிகம் ௧ - அதற்குமேற்கு ௬-கடிகையில்.

உ௱௧௮. திருவெருக்கத்தம்புலியூர் எ-து இராசேந்திரன் பட்டிணம் சுவாமி நிலகண்டேஸ்வரர் அம்மன் நீல மலர்க்கண்ணியம்மை தீர்த்தம் நீலோத்பலம் நரேந்திரனுண்டதலம் சாரங்கன் வெள்ளெருக்கஞ்செடியின் கீழ் சுவாமியுற்பவம் திருஞானபதிகம் ௧-அதற்குவடகிழக்கு ௨௦-கடிகையில்.

உ௱௧௯. திருத்தினைநகர் எ-து தீர்த்தனகர் சுவாமி திருந்தீஸ்வரர் அம்மன் ஒப்பிலாநாயகி திருந்து தீர்த்தம் விருக்ஷம் கொன்றை நினையமுதனைவேதனம் சுந்தரபதிகம் ௧ - அதற்குவடகிழக்கு ௫-கடிகையில்.

௨௨௰. திருச்சோபுரம் எ-து தியாகவல்லி சுவாமி சோபுரநாதர் அம்மன் சோபுரநாயகி சோபுரிதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குவடமேற்கு ௧௬-கடிகையில்.

௨௨௧. திருவதிகை சுவாமி வீரட்டேஸ்வரர் அம்மன்திரிபுரசுந்தரி இஃதட்ட வீரட்டத்திலொன்று திரிபுரதகனம் தீர்த்தம் கெடிலநதி அப்பர் சுவாமிகளுக்குச் சூலைநோய்விட்டதலம் மேற்படி சுவாமிகள் அஃதுதிரும்படிக்குக்கூற்றாயினவாறு விலக்ககிலீரொன்று திருப்பதிகம்பாடி வழிபட்டதலம் அச்சந்நிதிக் கீசானபாகத்தில் அப்பர்சுவாமி சிவபெருமானைவழிபட்டிருந்த மடமென்றின்னமும் வழங்குகின்றது பிஞகபாணியாய்ச் சிவபெருமானுந் தேவியுந் தக்ஷணாமுகமாக விருந்து திரிபுரசம் மாரம்பண்ணின அவதார மிருக்கின்றது விருக்ஷம் சரக்கொன்றை அப்பர்சுவாமிகளுக்குச் சூலைநோய்நீக்கிய தீர்த்தம் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சித்தவட்மடத்தித் திருவடிசூட்டினதலம் திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம்-௧௬-சுந்தரபதிகம் ௧ ஆக. ௧௮-அதற்குமேற்கு ௫-கடிகையில். திருவாமூரில் பங்குனி மீ-உரோகணியிலப்பர் சுவாமி கடிருவவதாரம் வேளாளமரபு உழவாரப் பணிவிடையுடன் அரனைப்பாடுந்திருத்தொண்டு அப்பர்சுவாமிகளும் பசுபதிஸவாரும் திரிபுரசுந்தரி யம்மையுமுடைய ஆலயம் மேற்படியூரிலிருக்கின்றது அப்பர்சுவாமிகளை முன்னீற்றறையி விட்டவிடம் இப்போ தோளடையாக விருக்கின்றது அதுதான் தீர்த்தம் மேற்படி அதிகைக்குத் தென்மேற்கு ௧௦-கடிகையில்

௨௨௨. திருநாவலூர் சுவாமி நாவலேஸ்வரர் அம்மன் சுந்தரநாயகி கருடதீர்த்தம் ஆவணி மீ-உத்திரநக்ஷத்திரத் திடபவிலக்கினத்திற் சுந்தரமூர்த்தி சுவாமிகடிருவவதாரம் ஆதிசைவப் பிராமணமரபு அரனைப்பாடுந் திருத்தொண்டு சடையநாயனார் இசைஞானிநாயனார் புகழ்த்துணைநாயனார் முத்திஸ்தலம் நாவல்விருக்ஷம் சுந்தரபதிகம் ௧-அதற்குத் தெற்கு ௧௫-கடிகையில்.

உஉ௩. திருமுதுகுன்றம் எ-து விருத்தாசலம் சுவாமி பழமலைநாதர் அம்மன் பெரியநாயகி தீர்த்தம் மணிமுத்தாநதி விருக்ஷம் வன்னி சுந்தரமூர்த்திசுவாமிக ளாலயத்துட்சென்று சிவபெருமானைக்காணாது இரண்டாம் பிரகாரத்தில் வரும் போது தக்ஷிணாமூர்த்திசந்நிதிக்குப் பக்கத்தில் நம்பி உருவமுற்றிருக்கக்கண்டு பரவையாருக்குப் பணம்வேணுமென்று பாடிக்கேட்டாருடனே நம்பியென்றுபாடச்சொல்லித் தாம் பொன்றருகிறோமென்று திருப்பதிகமு மொப்புக்கொண்டப் பொருளைக் கொடுத்தருளினது மன்றி மணிமுத்தாற்றிற் செம் பொன் னைக்கிப்போட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் வந் தெடுத்துப் பாசியாலழுக் கேறியிருக்கக்கண்டு அவரிடத்திலிருந்த மக்ஷத்தையும் அப்பொன்னையும் மாற்றுரைத்துச்சரியாயிருக்கும்படி அருளியதலம் திருவாரூரிற் கமலாலயம் கீழ்கரையிற் கெஜமுகரூபமாக மாற்றுரைத்த பிள்ளையாரும் மேற்படி முதுகுன்றத்திலு மப்படியே விநாயகரும் இருக்கின்றது திருஞானபதிகம் எ-திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் ௩-ஆக கக-அதற்கு வடமேற்கு கடு-கடிகையில்

உஉச திருநெல்வெண்ணை எ-து நெய்வெண்ணை சுவாமி வெண்ணையப்பார் அம்மன் நீலமலர்க்கண்ணாயகி வெண்ணைத்தீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்கு வடமேற்கு -௪0- கடிகையில்

உஉ௫ திருக்கோவலூர் எ-து கீழவூர்சுவாமி வீரட்டேசுரர் அம்மன் சிவானந்தவல்லி தீர்த்தம் பெண்ணை நதி இஃதட்டவீரட்டத்திலொன்று அந்தகாசுரனை வதை செய்ததலம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-ஆக உ-அதற்கு வடகிழக்கு முக்கால் கடிகையில்.

உஉ௬. திருவறையணிநல்லூர் எ-து அறைகண்டநல்லூர் சுவாமி அறையணிநாயகர் அம்மன் அருள்நாயகியம்மை பா

ண்டவதீர்த்தம் ஆறணியதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத்தென்கிழக்கு எ௬-கடிகையில்.

உஉஎ. திருவிடையார் சுவாமி இடையாற்றீஸ்வரர் அம்மன் சிற்றிடைநாயகி தீர்த்தம் சிற்றிடை சுந்தரபதிகம் க-அதற்குக்கிழக்கு உ௬-கடிகையில்.

உஉஅ. திருவெண்ணெய் நல்லூர் சுவாமி தடுத்தாட்கொண்டஈஸ்வரர் அம்மன் வேற்கண்ணம்மை தீர்த்தம் பெண்ணைநதி சுந்தரமூர்த்தி சுவாமிகளைத் தியாகராசர் தடுத்தாட்கொண்ட தலம் அவ்விடத்துச் சிவபெருமான் இடபாரூடராயிருக்கின்றார் சுந்தரபதிகம் க-அதற்கு வடகிழக்கு க0 - கடிகையில்.

உஉகூ. திருத்துறையூர் எ-து திருத்தலூர் சுவாமி பசுபதிஸ்வரர் அம்மன் பூங்கோதைநாயகி சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருவடி சூட்டியதுந்தவிர குருமுகூர்த்தமாயெழுந்தருளி யுபதேசமுஞ் செய்த முகூர்த்தம் சிட்டகுருநாதர் சிவலோக நாயகியம்மை சுந்தரபதிகம் க-அதற்குவடகிழக்கு க ‑ கடிகையில்.

உ௩0. திருவடுகூர் எ-து ஆண்டார் கோயில் சுவாமி வடுகீஸ்வரர் அம்மன் வடுவகிர்கண்ணி பஞ்சதீர்த்தம் திரிபுரசுந்தரி திருஞான பதிகம் க-அதற்குத்தென்கிழக்கு க0-கடிகையில்.

உ௩க திருமாணிக்குழி சுவாமி மாணிக்கவரதேஸ்வரர் அம்மன் மாணிக்கவல்லி மாணிக்கதீர்த்தம் வாமனவதாரத்தில் விஷ்ணு பூசித்ததலம் இஃதன்றி அவ்விஷ்ணுவுக்குபையோகஸ்தானமென்று பிரசன்னபட்டமெப்போதும்போட்டதில் ஏழாவது ருத்திரா பீம ருத்திரர்என்ற வுருவமெழுதி யிருக்கின்றது. அவர்காவலாக விருக்கின்றார் மேற்படி பிரசன்னபடத்துக்கே சோடசவுபசாரமு மருச்சனையுநடந்து அர்க்கியாராதனை செய்யும்போது மேற்படி பட்த்தை நீக்கித் தரிசனஞ் செய்கிறது இன்னம் வணிகருக் குதவிசெய் ததினு லுதவிநாயகரென்றும் அம்பலக்கண்ணியம்மை யென்றும் பெயு

ர்கொண்ட சுவாமிகளுமுண்டு கொன்றைவிருக்ஷம் திருஞா னபதிகம் ௧-அதற்கு வடகிழக்கு டு-கடிகையில்.

௨௬௨. திருப்பாதிரிப்புலியூர் சுவாமி தோன்றாத்துணை நாதர் அம்மன் தோகாம்பிகை சிவபெருமா னப்பர் சுவாமிக ளைசகடலினின்றுங் கரையேற்றி விட்டதலம் பாதிரிவிருக்ஷ ம் திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௧-ஆக. ௨-அதற்கு வ டமேற்கு டு-கடிகையில்.

௨௬௩. திருமுண்டீச்சுரம் எ-று திருக்கண்டீச்சரம் சுவா மி முண்டீஸ்வரர் அம்மன் சானுர்குழலி நடனபாதேஸ்வரர் அம்மன் அஸ்தகாளாம்பிகை முண்டகதீர்த்தம் திருநாவுபதிக ம் ௧-அதற்கு வடமேற்கு ௬-கடிகையில்.

௨௬௪ திருப்புறவார் பனங்காட்டூர் எ-று பனையபுரம் சு வாமி பனங்காட்டீஸ்வரர் அம்மன் திருப்புறவாம்பாள் பதும தீர்த்தம் சிபிச்சக்கிரவர்த்திக்குத் தரிசனந் தந்ததலம் தாலவி ருக்ஷம் திருஞானபதிகம் ௧-அதற்கு மேற்கு ௪-கடிகையில்

௨௬௫ திருவாமத்தூர் சுவாமி காமார்த்தேஸ்வரர் அம்ம ன் அழகியநாயகி பரமதீர்த்தம் கோடிமகாரிஷியும் பசுவும் பூசையாற்றிய தலம் வன்னிவிருக்ஷம் திருஞான பதிகம்-௨ திருநாவுபதிகம் ௨ சுந்தரபதிகம் ௧-ஆக. ௫-அதற்கு வடமே ற்கு ௩௦-கடிகையில்

௨௬௬ திருவண்ணாமலை சுவாமி அருணாசலேஸ்வரர் அம் மன் உண்ணாமுலையாள் தீர்த்தம் சிவகங்கை பிரமதீர்த்தம் தி க்குப்பாலகர் தீர்த்தங்கண்முதலிய வனேகதிவ்விய தீர்த்தங் கள் சிவபெருமான் வல்லாளராசனுக்குப் புத்திரனுகத் தோ ன்றி யுத்தரகிரியையுஞ் செய்தனர் இரண்டாம் பிரகார மே ற்புறத்தில் விஷ்ணு புள்ளாங்குழல் வாயில்வைத் தூதிக்கொ ண்டிருக்கின்றார் இவ்வாறே திருஞான சம்பந்தமூர்த்திசுவா மிகள் பதிகத்திலும் கட்டளையிட்டிருக்கின்றது பிரமவிட்டு ணுக்களுடைய மமகாரந்திர வாக்குவபித்தபிரகாரம் விஷ்ணு வானவர் வராகாவதாரமாய்த்திருவடியைத்தேடிக்காணுதயர

வும் பிரமதேவன் அன்னரூபமாய்த் திருமுடியைத் தேடி மொழிமாறித் துக்கத்தையடையவுஞ் சிவபெருமானக்கினி மலையா யெழுந்ததலம் அம்மலை கிரேதாயுகத்தில் அக்கினிமலையாயும் திரேதாயுகத்தில் சுவர்ணமலையாயும் துவாபரயுகத்தில் தாம்பிரமலையாயும் கலியுகத்திற் கன்மலையாயு மிருக்கின்றது அத்தலமினைக்க முத்திஸ்தலம் கார்த்திகை மீ-கார்த்திகை நட்சத்திரத்தில் சிவபெருமான் சுடரொளித் தீபதரிசனம் திருஞானபதிகம் உ-திருநாவு பதிகம் ரு-ஆக ௫-ஆக. நடுநாடு உஉ-ம் முற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாடு. காமகோடி பீடமாகிய.

உஊஎ. திருக்கச்சி யேகம்பமென்பது காஞ்சிபுரம் சுவாமி ஏகாம்பரநாதர் அம்மன் காமாட்சியம்மை தழுவக்குழைந்தவர் அத்தலத்தி லிரண்டாம் பிரகாரந்தென்பாலில் பிரமனுற் பூசிக்கப்பட்டவர் வெள்ளக்கம்பனென்றும் வடபுறத்தில் விஷ்ணுவாற் பூசிக்கப்பட்டவர் கள்ளக்கம்பனெனவும் பெயர் பெற்றிரண்டு சிவலிங்கப்பெருமானு ரெழுந்தருளி யிருக்கின்றனர் மேற்படி ஆடிசன்பேட்டையில் திருக்குறிப்புத் தொண்டநாயனுர் ஆலயம் அந்தவாலயத்தில் ஐந்தாம்பிரகாரத் தென்னண்டையிற் பிரிதிவு தலம் தீர்த்தம் சிவகங்கை கம்பாநதிவார தீர்த்தமுதலிய வனந்தபுண்ணிய தீர்த்தங்களுமுண்டு விருக்ஷம் மாமரம் திருஞான பதிகம் ௬-திருநாவுபதிகம் அ-சுந்தரபதிகம் க-ஆக. கரு - அதற்குத் தென்மேற்கு க-கடிகையில்.

உஊஅ. திருமேற்றளி எ-து கச்சிமேற்றளி சுவாமி திருமேற்றளிநாதர் அம்மன் காமாக்ஷியம்மை திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக உ-அதற்குவடக்கு க-கடிகையில்.

உஊஊ. திருவோணகாந்தன்றளி சுவாமி ஓணகாந்தீஸ்வரர் அம்மன்காமாட்சியம்மை சுந்தரமூர்த்தி சுவாமிகட்குப் பொற்காசளித்ததலம் ஓணனென்றும் காந்தனென்றும் பெயரையுடைய விரண்டசுரராற் பூசித்ததலம் ஓணகாந்த தீர்த்தம் சுந்தரபதிகம் க-அதற்குத் தெற்கு ௧-கடிகையில்.

உசO. திருவனேக தங்காவதம் எ-து கச்சியனேக தங்காவதம் சுவாமி திருவனேக தங்காவதேஸ்வரர் அம்மன் காமாட்சியம்மை தாணுதீர்த்தம் சுந்தரபதிகம் க - அதற்குக்கிழக்கு உ-கடிகையில்.

உசக. திருக்கச்சி நெறிக்காரைக்காடு எ-து திருக்காலீஸ்வரர் கோவில் சுவாமி காரைத்திருநாதேஸ்வரர் அம்மன் காமாட்சியம்மை காஞ்சிமுதலிவ்வைந்து தலங்கட்கும் அம்மன் முற்சொல்லிய காமாட்சியம்மை யாகையால் மேற்படி கச்சியேகம்பத்தை காமகோடி பீடமென்றுரைப்பது இந்திரதீர்த்தம் காரைதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத் தெற்கு-க-கடிகையில்.

உசஉ, திருக்குரங்கணின்முட்டம் சுவாமி வாலீஸ்வரர் அம்மன் இறையார்வளைநாயகி கொய்யாமலீஸ்வரரென்றொருபெயர் சுவாமிக்கு வழங்குகின்றது வாலிதீர்த்தம் நளகங்கை அதிற் குரங்கு அணில் காக்கை பூசித்ததலம் திருஞானபதிகம் க-அதற்குத்தென்கிழக்கு ரு-கடிகையில்.

உசங, திருமாகரல் சுவாமி மங்கலங்காத்தவரதேஸ்வரர் அம்மன் திருபுவனநாயகி நவ்விதீர்த்தம் புத்துவளையிலிருந்து சிவபெருமா னுதையமானதலம் உடும்புதழுவிக் கொண்டிருக்கின்றது திருஞானபதிகம் க-அதற்குத் தென்மேற்கு - கங-கடிகையில்.

உசச, திருவோத்தூர் சுவாமி வேதநாதேஸ்வரர் அம்மன் இளமுலைநாயகி திருஞானசம்பந்த மூர்த்திசுவாமிகள் ஆண்பனையைப் பெண்பனையாக்கியதலம் திருஞானபதிகம் க-அதற்கு வடக்கு அ-கடிகையில்.

உசரு, திருப்பனங்காட்டூர் எ-து வன்பார்த்தான்பனங்காட்டூர் சுவாமி பனங்காட்டீஸவரர் அமமன் அமுதவல்லியம்மை பனம்பழம் சிவபெருமானுக்கு நிவேதனமாகுந் தலம் சந்நிதியில் சமன் நிலையாக இரண்டு பனைவிருக்ஷங்க ளிருக்கின்றன சம்பந்ததீர்த்தம் அப்பர்தீர்த்தம் சுந்தரதீர்த்தம் அதற்

குத்தெற்கு ஒருகடிகையில் வன்பார்க்கம் சுவாமி இராமசாமிஈசுரர் அம்மன் பஞ்சின் மெல்லடியம்மை அம்மார்க்கத்தித் சுந்தரமூர்த்தி சுவாமிகள் எழுந்தருளிவந்தபோது சிவபெருமான் பிராமணவேடம் பூண்டுவந்து கொடுத்த கட்டமுதைப்புசித்தவுடன் பிராமணனைநோக்கி எவ்வூரென்றுகேட்கவன்பார்க்கத்துக்கும் பனங்காட்டூருக்குமாக இருப்போமென்றுசொல்லி மறைந்தருளினர் உடனே யிதுவுஞ் சிவபெருமானாடலெனத்தேர்ந்து திருப்பதிகம்பாடியருளினர் இவ்விருதலத்திற்கும் சுந்தரபதிகம் க - அதற்கு வடமேற்கு - உ0 - கடிகையில்-

உஎசு, திருவல்லம் சுவாமி வல்லநாயகேஸவரர் அம்மன் வல்லாம்பிகை தீர்த்தம் திருவல்லம் வாலாம்பேட்டை மலையில் கஞ்சார ராக்ஷதனென்னொரு அசுரனைச்சங்காரஞ் செய்ததாகப் புராணமிருக்கிறது மேற்படிதலத்தில் நந்திகேஸவரர் கிழக்குமுகமாக விருக்கின்றார் திருஞானபதிகம் க-அதற்குக்கிழக்கு கசு-கடிகையில்.

உசஎ. திருமாற்பேறு சுவாமி மால்வணக்கேஸவரர் அம்மன் கருணாநாயகி விஷ்ணுபேறுபெற்றதலம் அரி தீர்த்தம் திருஞானபதிகம் உ-திருநாவுபதிகம் ச-ஆக-சு-அதற்கு வடகிழக்கு-ரு-கடிகையில்.

உசஅ. திருவூறல் எ-து தக்கோலம் சுவாமி உமாபதீஸவரர் அம்மன் உமாதேவி சேலநாதவீஸவரர் சரிசரகன்னியம்மை யெனவழங்குகிறது தீர்த்தம் ஊறல் இதற்குவடக்கிற்சமீபத்தில் கங்காதரவீஸவரர் மோகனவல்லியெனப் பெயர்வாய்ந்த சுவாமியம்மையுடைய வோராலய மிருக்கின்றது அவ்வாலயததி னந்தியின்வாயினின்று கங்கையுதயமாகி அச்சிவபிரானை வலமாகப் பிரதக்கணஞ் செய்துக் கொண்டு மேற்படி உமாபதீஸவரர் துஜஸதம்பத்தி னிடமான நந்தியருகில்வந்து குளத்திற்றேங்கி கால்வாய்வழியாய்க் கழனிகளிற்செல்கின்றது திருஞானபதிகம் க-அதற்குத்தென்கிழக்கு ரு-டிகையில்.

உ௪௯ திருவிலம்பிபங்கோட்டூர் சுவாமி சந்திரசேகரேஸ்வரர் அம்மன் கோடேந்துமாமுலையாள் தேவநாயகர் சதிர்முலையம்மை யெனவுமிக்காலத்தில் வழங்குகின்றது அரம்பையர்பூசித்ததலம் இந்துதீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குவடகிழக்கு கஉ-கடிகையில்

உ௫0 திருவிற்கோலம் எ-து கூவம் சுவாமி புராந்தகவீஸ்வரர் அம்மன் புராந்தகநாயகி தீர்த்தம் விற்கோலம் இத்தலத்தின் வடக்கொருகடிகையில் விர்த்தவிராந்தி உத்தரவாகினியாகவந்தவிடத்தி லொருதிடரில் உத்தேச மணாக்காணிநிலமனைலாயிருக்கின்றது அதினூற்றுண்டாக்கி நான்குகாலத்துக்கும் திருமஞ்சனங்கொடுவந்து புனிதத்துடன்சிவலிங்கப்பெருமானுருக்கு அபிடேகம் செய்கின்றனர் தீண்டாத்திருமேனி கூபாக்கினி தீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குவடமேற்கு அகடிகையில்

உ௫க திருவாலங்காடு சுவாமி அமுதநாண்டேஸ்வரர் அம்மன் வண்டார்குழலி காரைக்காலம்மை தலையானடந்து பங்குனிமீ சோதியிற் சிவபெருமான்றுயெனவழைக்கப்போயென்று சொல்லிக்கொண்டு திருவடியடைந்ததலம் இரத்னசபை பலாவிருக்ஷம் ஞானதீர்த்தம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் உ-சுந்தரபதிகம் க-ஆக-ச அதற்குக் கிழக்கு ௫கடிகையில

உ௫உ திருப்பாசூர் சுவாமி பாசூரநாதர் அம்மன் பசுபதிநாயகி இக்காலதது வாசீஸ்வரர் சுயம்புவனியம்மையெனவழங்குகின்றது மூங்கிலடியிற் சிவபெருமானுதித்ததலம் சோழனுக்கொருகாரணார்த்தமாக பாமபாட்டியாகத் திருவுருக்கொண்டாடல்காட்டியதலம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் உ-ஆக-௩-அதற்குவடக்கு ௩-கடிகையில்

உ௫௩ திருவெண்பாக்கம் எ-து திருவழம்பூர் சுவாமி வெண்பாக்கநாதர் அம்மன் கனிவாய்மொழியம்மை ஊன்றீஸ்வரர் மின்னலொளிநாயென்று வழங்குகிறது கைலாயதீர்த்த

ம் சுந்தரமூர்த்திசுவாமிகளுக்குக் கோல்கொடுத்ததலம் இதற்குச தெற்கு ௭-கடிகையில் வெண்பாக்கமென்கிறதில் கைகாட்டியநாதர் பரமேஸ்வரி யம்மை யெழுந்தருளி யிருக்கின்றவோராலய மிருக்கின்றது சுந்தரபதிகம் க-அதற்கு வடகிழக்கு கo-கடிகையில்

உருச திருக்கள்ளில எ-து திருக்கள்ளம் சுவாமிசிவானந்தநாதர் அம்மன் ஆனந்தவல்லியம்மை தீர்த்தம் ஆனந்தம் திருஞானபதிகம் க-அதற்குவடமேற்கு சo-கடிகையில்

உருரு திருக்காளத்தி சுவாமி காளத்திநாதர் அம்மன் ஞானப்பூங்கோதை பாம்பு யானை சிலந்தி கண்ணப்பர் சுவாமிகள் நக்கீரர் சிவகோசரியார் முதலியோர் முத்தியுற்றதலம் திருஞானபதிகம் உ-திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக-ச அதற்குத் தென்கிழக்கு(ருo)கடிகையில்

உருசு திருவொற்றியூர் சுவாமி மாணிக்கத்தியாகர் அம்மன் வடிவுடைஅம்மை ஆதிபுரீசுரர் திரிபுரசுந்தரியம்மை எனவும்வழங்குகின்றது சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு சங்கிலிநாச்சியாரை சிவபெருமான் திருமணஞ்செய்வித்ததலம் கலிநீதிநாயனார் வழிபாடாற்றி முத்தியுற்றதலம் அத்தலத்தின்கண் பட்டணத்துப்பிள்ளையார் திவ்வியசமாதியு மிருக்கின்றது பிரமன்பூசித்ததலம் பிரமதீர்த்தம் மகிழவிருக்ஷம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் ரு-சுந்தரபதிகம் உ-ஆக அ-அதற்குத் தென்மேற்கு எ-கடிகையில்

உருஎ திருவலிதாயம் எ-து பாடி சுவாமி வலிதாயநாதர் அம்மன் தாயம்மை தீர்த்தம் வலிதாயம் திருஞானபதிகம் க அதற்குவடமேற்கு ரு-கடிகையில்

உருஅ திருவடமுல்லைவாயில் சுவாமி மாசிலாமணியீஸ்வரர் அம்மன் கொடியிடைநாயகி தீர்த்தம பாலாறுசுப்பிரமணியர்பூசித்ததலம் சுப்பிரமணிய தீர்த்தம் ஆதொண்டைச்சக்கிரவர்த்தி வெட்டுத்தாங்கிச் சிவலிங்கப்பெருமானார் வெளிப்பட்ட தலம் சுந்தரபதிகம் க-அதற்குத் தென்மேற்கு ௯-கடிகையில்

உருக திருவேற்காடு சுவாமி வேற்காட்டீஸ்வரர் அம்மன் வேற்கண்ணியம்மை வேற்கண்ணி தீர்த்தம் திருஞானபதிகம் க-அதற்குத் தென்கிழக்கு கo-கடிகையில்

உசுo திருமயிலாப்பூர் சுவாமி கபாலீஸ்வரர் அம்மன் கற்பகவல்லி கபாலீச்சுரம் கபாலிதீர்த்தம் மணிகர்ணிகை விருக்ஷம் புன்னாகம் திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் என்பை பூம்பாவையென்னு நாமத்தையுடைய வொருபெண்ணாகும்படி பாடியருளியதலம் பார்வதியார் மயிலாய்ப் பூசித்ததலம் திருஞானபதிகம் க-அதற்குத் தென்கிழக்கு ௬-கடிகையில்

உசுக திருவான்மியூர் சுவாமி மருந்தீஸ்வரர் அம்மன் சொக்கநாயகி யம்மை வான்மீகரிஷிக்குச் சிவபெருமா நடனதரிசனங் காட்டியதலம் திருஞானபதிகம் உ-திருநாவுபதிகம் க-ஆக ௩-அதற்குத் தென்மேற்கு கஅ-கடிகையில்

உசுஉ திருக்கச்சூராலக்கோயில் சுவாமி விருந்திட்ட ஈஸ்வரர் அம்மன் அஞ்சனாக்ஷி சிவபெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு அமுது கொடுத்ததலம் விருந்துதீர்த்தம் சுந்தரபதிகம் க-அதற்குத் தென்கிழக்கு ௫-கடிகையில்

உசுங திருஇடைச்சுரம் சுவாமி இடைச்சுரநாதர் அம்மன் மடக்கொடிநாயகி இஃது ஞானபுரி யீஸ்வரர் கோவர்த்தனம்பாள் என்றும் வழங்குகின்றது மதுதீர்த்தம் நான்குதிக்கும் பருப்பதங்கள் நந்திமலை கிர்த்திகைதீபம் திருஞானபதிகம் க அதற்குத் தெற்கு ௫-கடிகையில்

உசுச திருக்கழுக்குன்றம் சுவாமி வேதகிரீஸ்வரர் அம்மன் பெண்ணினல்லாளம்மை பக்ஷிதீர்த்தம் நந்தீஸ்வர தீர்த்தம் கழுக்கள் பூசிக்குந்தலம் திருஞானபதிகம் க-திருநாவுபதிகம் க-சுந்தரபதிகம் க-ஆக ௩-அதற்குத தென்மேற்கு உo கடிகையில்

உசு௫ திருஅச்சிறுபாக்கம் சுவாமி பாக்கபுரேஸ்வரர் ஆக்ஷியீஸ்வரர் அம்மன் சுந்தரமின்னம்மை மரகதவல்லியம்மை

திரிபுரதகனத்துக்குச் சிவபெருமான் இரதமேறியபோது அச்சிற, விநாயகரருளாலச்சுக்கூடியதலம் விருக்ஷம்கொன்றை சங்குதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குத்தென்மேற்கு-௨௫ கடிகையில்

௨௬௬, திருவக்கரை சுவாமி சந்திரசேகர ஈசுவரர் அம்மன் வடிவாம்பிகை அன்றி அமுதாம்பிகை வக்கிராசுரன் பூசித்ததலம் சந்திரதீர்த்தம் பிரமதீர்த்தம் திருஞானபதிகம் ௧-அதற்குக் கிழக்கு ௯ கடிகையில்.

௨௬௭. திருஅரிசிலி எ-து ஒழுந்தியாப்பட்டு சுவாமி அரிசிலிநாதர் அம்மன் பெரியநாயகி தீர்த்தம் அரிசிலி திருஞானபதிகம் ௧-அதற்குத்தென்கிழக்கு ௨-கடிகையில்.

௨௬௮, திருவிரும்பைமாகாளம் சுவாமி மாகாளேஸ்வரர் அம்மன் குயின்மொழிநாயகி மதுசுந்தரநாயகி யெனவழங்குகின்றது திருஞானபதிகம் ௧- ஆக தொண்டைநாட்டிலுள்ள திருப்பதியாகிய சிவதலங்கள் ௫௨-ம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

துளுவநாடு.

௨௬௯, திருக்கோகரணம் சுவாமி மகாபலநாதர் அம்மன் கோகரணநாயகி கோகரணதீர்த்தம் இராவணேசுரன் கைலாயத்திருந்து சிவபிரானனுக் கிரகத்தாற் கொண்டுவந்த சிவலிங்கப்பெருமானை வழியினின்று தந்திரத்தாற் கணபதி வாங்கிப் பிரதிட்டைசெய்ததலம் திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௧-ஆக ௨-முற்றிற்று. திருச்சிற்றம்பலம்.

வடக்குத் திருச் சிவஸ்தலம்.

௨௭0, திருப்பருப்பதம் சுவாமி பருப்பதநாதர் அம்மன் பருப்பதநாயகி தீர்த்தம் பாலாழி இதவேமல்லிகார்ச் சுனபர்வதம் நந்திகேசுரர் பூசித்தமலை திருஞானபதிகம் ௧-திருநாவுபதிகம் ௧-சுந்தரபதிகம் ௧-ஆக ௩.

௨௭௧, திருவிந்திர நீலப்பருப்பதம் சுவாமி நீலாசலநாயகேஸ்வரர் அம்மன் நீலாம்பிகை தீர்த்தம் நீலாம்பிகை திருஞானபதிகம் ௧.

௨௭௨, திருவனேகதங்காவதம் சுவாமி அருண்மன்னேஸ்வரர் அம்மன் மனோன்மணி ஞானதீர்த்தம் திருஞானபதிகம் ௧.

௨௭௩, திருக்கேதாரம் சுவாமி கேதாரநாதேஸ்வரர் அம்மன் கேதாரகௌரியம்மை மந்தாகினிதீர்த்தம் ஆறுமாதந் தேவதைகளும் ஆறுமாதமனுடரும் பூசித்துவருந்தலம் திருஞானபதிகம் ௧-சுந்தரபதிகம் ௧-ஆக-௨.

௨௭௪, திருநொடித்தான்மலை எ-று ஸ்ரீ கைலாயம் சுவாமி பரமசிவம் அம்மன் பார்வதிதேவி அதுவே வெள்ளியங்கிரி தீர்த்தம் சரவணப்பொய்கை திருஞானபதிகம் ௨-திருநாவுபதிகம் ௪-சுந்தரபதிகம் ௧-ஆக ௭-ஆக வடபதி ௫-ம் முற்றிற்று திருச்சிற்றம்பலம்.

ஆக திருச்சிவதலம் (௨௭௪) க்கும் உள்ள திருப்பதிகம் (௭௪௧) ம் திருஞான பொதுப்பதிகம் - ௭ - ம் திருநாவுபொதுப்பதிகம் - ௯௭ - ம் சுந்தர பொதுப்பதிகம் - ௪ - ம்ஆக (௮௪௯) ம் முற்றுப் பெற்றது. திருச்சிற்றம்பலம்.

தேவாரம்

கற்றுக்கொள்வன வாயுள நாவுள
விட்டுக்கொள்வன பூவுள நீருள
கற்றைச்செஞ்சடை யானுளனுமுளோ
மெற்றுக்கோநம னான்முனிவுண்பதே.

அட்டவீரட்டத்தலம் ௮-க்கு விபரம்.

கட்டளைக் கலித்துறை.

பூமன்சிரங்கண்டி யந்தகன் கோவல்புரமதிகை
மாமன்பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன்கொறுக்கையமன் கடவூரிந்தக் காவிரியிற்
றேமன்னுகொன்றையுந் திங்களுஞ்சூடிதன் சேவகமே.

அறுபத்துமூன்று நாயனமார்களுதையம்.

சித்திரையிலேவர் வைகாசியினிலேவர்
திகழானிதனிலேவ ராடியினிலேவர்
பொத்தியசிராவணியிலறுவர் புரட்டாசிபுகழ்
நால்வரைப்பசியி லறுவர்கார்த்திகையில்
வித்தாரமோரைவர் மார்கழியோரைவர்
விளங்கியதைமசியெழுவர் மாசிதனிலேவர்
வைத்ததிறற் பங்குனியிலேவ ரீராறு
மாதத்தில்வாறறுபான் மூவருதித்தனரே.

சமையாசாரியர்கள் நால்வரும் முத்திபெற்ற

திருநக்ஷத்திரம்.

சித்திரைச்சதையமப்பர் சிறந்தவைகாசிமூலம்
அத்தனைப்பணிசம்பந்தர் ஆனிமாமகத்திலந்த
முத்தமிழ்வாதவூரர் முதியநல்லாடிதன்னிற்
சுத்தமாஞ்சுவாதிநாளிற் சுந்தரர்கைலைபுக்கார்.
சிவனடியேசிந்திக்குந் திருப்பெருகுஞ்சிவஞானம்
பவமதனையறமாற்றும் பாங்கினிலோங்கியஞான
முவமையிலாக்கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தாரந்நிலையில்.
வேதநெறிதழைத்தோங்க மிகுசைவத்துறைவிளங்கப்
பூதபரம்பரைபொலியப் புனிதவாய்மலர்ந்தழுத
சீதவளவயற்புகலித் திருஞானசம்பந்தர்
பாதமலர்தலைக்கொண்டு திருத்தொண்டுபரவுவாம்.

திருச்சிற்றம்பலம்.

---





சிவமயம்.

இங்ஙனங்கூறிய தலங்களையன்றி
தரிசித்ததலங்களாவன.

௫௦-வது. திருப்பழனத்துக்கு வடகிழக்கு ௪௨-௪-ல். சோமீச்சரம் சுவாமி சோமசுந்தரேசுரர் அம்மன் மீனாட்சியம்மை இஃது திருப்பதிகவைப்பில் இருக்கின்றதலம்.

௮௫-வது, கும்பகோணத்துக்கு வடமேற்கு ௨௭-கடிகை சுவாமிமலை சுப்பிரமணியஸ்தலம் தீர்த்தம் காவேரி.

௯௨-வது, திருநாகேச்சுரத்துக்கு வடகிழக்கு ௨-கடிகை திருபுவனம் சுவாமி கம்பேசுரர் அம்மன் அறம்வளர்த்தம்பாள் இரணியாசுரனை சங்காரஞ்செய்து மதர்த்த விஷ்ணுஅவதாரமாகிய நரசிம்மத்தைச் சிவபெருமான் சரபபக்ஷிரூபமாகி அம்மதத்தை யடக்கியதலம் சரபவிஸ்வர மூர்த்தமிருக்கின்றது தீர்த்தம் காவேரி.

௱௧௫-வது. திருத்தெளிச்சேரிக்குத்தெற்கு ௭-௧-ல் காரைக்கால் சுவாமி சோமநாதேசுவரர் அம்மன் சோமநாயகி தீர்த்தம் சந்திரபுஷ்கரணி காரைக்காலம்மையார் திருவவதாரஞ்செய்ததலம் அன்றியும் அத்திருநகரத்தில் கைலாசநாதர் அண்ணாமலையீசுரர் ஆலயங்களுமிருக்கின்றன.

௱௧௪-வது, திருத்தருமபுரத்துக்கு வடமேற்கு ௬-கடிகையில் திருத்தக்களூர் சுவாமி திருலோகநாதர் அம்மன் தர்மசமர்த்தனி இஃது திருப்பதிகவைப்பில இருக்கின்றதலம்.

௱௧௬-வது, திருக்கோட்டாற்றுக்குக்கிழக்கு ௨-கடிகையில் செங்காடு எ-து திர்க்காரணியம் சுவாமி தான்தோன்றியீசுரர் அம்மன் நெடுந்தவனாதீர்த்தாள் அன்பிறுப்பிரியாள் சுயம்புக்ஷேத்திரம் தீர்த்தம் நெடுந்தவனத்தீர்த்த ஏரி அகஸ்திய மகாமுனிவர் வில்வலன் வாதாபியை வதைத்த தோஷந்நீங்

கும்பொருட்டு பூசித்ததலம். அன்றியும் அம்முனிவர் அப்பதி யில் அஷ்டலிங்கப் பிரதிட்டையுஞ்செய்து பூசித்திருக்கின்றார் இதற்குக்கிழ்பாரிசத்தில் வாதாபி அறப்பென்றொரு கிராமமு மிருக்கின்றது.

௱௫௦-வது, திருவாரூரறநெறிக்குத்தெற்கு ரு-கடிகை திருவேமப்பேறாமென்னுந் திருநெய்ப்பேறென்னுந் தலத்திலிருந்து நமிநந்தியடிகள் நெய்விளக்கிட்டு மோக்ஷமடைந்ததலம் இஃது திருப்பதிக ஸ்வப்பி லிருக்கின்றது இப்போது திருமப்பத்தென்று வழங்குகின்றது.

௱அசு-வது, திருச்சுவளைக்குத் தெற்கு (க)கடிகையில் எட்டுகுடி வேலாயுதமூர்த்தியாகிய ஆறுமுகப்பெருமாளெழுந்தருளியிருக்கின்ற தலம்.

௱கூஎ-வது, திருக்கொடுங் குன்றத்துக்கு வடகிழக்கு கூ-கடிகையில் கண்ணைப்பதி எ-து பறியாமருந்தபட்டி சுவாமி பறியாமருந்திசுவரர் அம்மன் பரஞ்சோதி பார்வதி இஃது சுயம்புஸ்தலம சர்வானந்த தீர்த்தம் மருதவிருக்ஷம் இத்தலத்தில் கூன்பாண்டியனுக்குள்ள பிணியை மருந்து பறித்தூட்டா தகற்றின னென்பர் இதன் கிழக்கு க௦-கடிகையில்.

திருஇளையாத்தக்குடி எ-து கோவிலிளையாத்தக்குடி சுவாமி கைலாசநாதர் அம்மன் நித்தியகலியாணி ஸ்தலம்.

உ௱கரு-வது, திருவரத்துறைக்குச் சமீபத்தில் மாறன்பாடி சுவாமி தாசநிவார்த்தனாசுரர் அம்மன் அன்னபூரணியம்மை தேன்துளி தீர்த்தம்.

உ௱சரு-வது, திருப்பனங்காட்டூர் என்னும் வன்பார்த்தான் பனங்காட்டூர் தலத்துக்கு வடபால் கிருபாநாயகரென்றுங் கிருபாநாயகியென்றும் பேருடைய ஒருதலமிருக்கின்றது.

உசுஉ-வது, திருக்கச்சூராலக்கோயிலுக்கு மேற்கு ௩-கடிகையில் மலையடிவாரம் சுவாமி மருந்தீஸ்வரர் அம்மன் இருணிக்கிய நாயகி கூர்மதீர்த்தமுமுடைய ஒருதலம் இருக்கின்றது முற்றிற்று திருச்சிற்றம்பலம்

உ

கணபதி துணை.

# திருஞானசம்பந்த சுவாமிகள்.

## தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

தோடுடைய செவியன் விடை யேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப் பொடிபூசியென துள்ளங் கவர்கள்வ
னேடுடையமலரான்முனைநாட்பணிந்தேத்த வருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.

அருநெறியமறைவல்ல முனியகன்பொய்கையலர்மேய
பெருநெறியபிரமாபுரமேவிய மெம்மானிவன்றன்னை
யொருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தனுரைசெய்த
திருநெறியதமிழ்வல்லவர்தொல்வினைதீர்தலெளிதாமே.

உ

திருச்சிற்றம்பலம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

கூற்றாயினவாறுவிலக்ககிலீர்
  கொடுமைபலசெய்தனநானறியே
னேற்றாயடிக்கே யிரவும்பகலும்
  பிரியாதுவணங்குவ னெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற்றி னகம்படியே
  குடரோடு தொடக்கிமுடக்கியிட
வாற்றேனடியே னதிகைக்கெடில
  வீரட்டானத் துறையம்மானே.

போர்த்தாயங்கோரானை யினீருரிதோல்
  புறங்காடரங்கா நடமாடவல்லா
யார்த்தானரக்கன் றனைமால்வரைக்கீ
  ழடர்த்திட்டருள் செய்தவதுகருதாய்
வேர்த்தும்புரண்டும் விழுந்தெழுந்தா
  லென்வேதனையான விலக்கியிடா
யார்த்தார்புனல்சூ ழதிகைக்கெடில
  வீரட்டானத் துறையம்மானே,

திருச்சிற்றம்பலம்

சுந்தரமூர்த்தி சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறைசூடி பெருமானேயருளாளா
வெத்தான்மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறை
ளத்தாவுனக்காளாயினி யல்லே னெனலாமே. [௰
காரூர்புனலெய்திக் கரைகல்லித்திரைக்கையாற்
பாரூர்புகழெய்தித் திகழ்பன்மாமணியுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளாரூரனெம்பெருமாற் காளல்லேனெனலாமே.

திருச்சிற்றம்பலம்.

௨

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டத்தொகை.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியே
னில்லையே யென்னாத வியற்பகைக்கு மடியே
னிளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார்விறன்மிண்டற்கடியே
னல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௧)

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தற் கடியே
னேனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாற
னெஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியே
னலைமலிந்த புனன்மங்கை யானாயற் கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௨)

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத்தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடாநிற்க
வெகுண்டெழுந்த தாதைதனை மழுவினா லெறிந்த
வம்மையா னடிச்சண்டிப் பெருமானுக்கடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௩)

திருநின்றசெம்மையேசெம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியே
னொருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியே
னொலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற்கடியே
னருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக்காளே. (௪)

வம்பறா வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
வெம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியே
னேயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியே
னம்பிரான் திருமூல னடியார்க்கு மடியே
னாட்டமிகு தண்டிக்கு மூர்க்கற்கு மடியே
னம்பரான்சோமாசி மாறனுக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (௫)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியே
னார்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியே
னாரூர னாரூரி லம்மானுக்காளே. (௬)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற்கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகையதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்குமடியே
னையடிகள் காடவர்கோ னடியர்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (எ)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண்டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்குமடியே
னிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
றுறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியே
னறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியே
னாரூர னாரூரி லம்மானுக்காளே. (அ)

கடல்சூழ்ந்தவுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்குமடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை [ன்
மன்னவனாஞ்செருத்துணைதன் னடியார்க்கு மடியே
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி [டியே
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு ம
னடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (கூ)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியே
னப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியே
னாரூர னாரூரி லம்மானுக் காளே. (கய)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்
றென்னவனு முலகாண்ட செங்கணார்க்கடியேன்
றிருநீல கண்டத்துப் பாணனார்க்கடியேன்
றென்னவனு மானடியே யடைந்திட்டசடைய
னிசைஞானி காதலன் றிருநாவலூர்க்கோ
னன்னவனு மாரூ னடிமைகேட் டுவப்பா
ரூரி லம்மானுக் கன்பரா வாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

## மாணிக்கவாசக சுவாமிகள்

## திருவாசகம்.

உடையாளுன்றனடுவிருக்கு முடையாளுனடுவுணியிருத்தி
யடியேனடுவுளிருவீரு மிருப்ப தானாலடியேனுன்
னடியார்நடுவுளிருக்குமருளைப்புரியாய்ப்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலே யென்கருத்துமுடியும்வண்ணமுன்னின்றே.

சோதியேசுடரே சூழொளிவிளக்கே
சுரிகுழற்பணைமுலை மடந்தை
பாதியேபரனே பால்கொள்வெண்ணீற்றாய்
பங்கயத்தயனுமா லறியா
நீதியேசெல்வத் திருப்பெருந்துறையி
னிறைமலர்க்குருந்த மேவியசீ
ராதியேயடியே னாதரித்தழைத்தா
லதெந்துவே யென்றருளாயே.

திருச்சிற்றம்பலம்.

## திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா.

ஒளிவளர்விளக்கே யுலப்பிலாவொன்றே
யுணர்வுசூழ்கடந்ததோ ருணர்வே

தெளிவளர்பளிங்கின் றிரண்மணிக்குன்றே
சித்தத்துட்டித் திக்குந்தேனே
யளிவளருள்ளத் தானந்தக்கனியே
யம்பலமாட ரங்காக
வெளிவளர்தெய்வக் கூத்துகந்தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

திருச்சிற்றம்பலம்.

## சேந்தனார் திருவிசைப்பா.

ஏகநாயகனை யிமையவர்க்கரசை
யென்னுயிர்க் கமுதினை யெதிரில்
போகநாயகனைப் புயல்வணற்கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேகநாயகனை மிகுதிருவீழி
மிழலைவிண் ணிழிசெழுங்கோயில்
யோகநாயகனை யன்றிமற்றொன்று
முண்டெனவுணர்கிலேன் யானே.
கற்றவர்விழுங்குங் கற்பகக்கனியைக்
கரையிலாக் கருணைமாகடலை
மற்றவரறியா மாணிக்கமலையை
மதிப்பவர் மனமணிவிளக்கைச்
செற்றலர்புரங்கள் செற்றவெஞ்சிவனைத்
திருவீழிமிழலைவீற் றிருந்த
கொற்றவன்றனைக் கண்டுகண்டுள்ளங்
குளிரவென் கண்குளிர்ந்தனவே.

## சேந்தனார் திருப்பல்லாண்டு.

சொல்லாண்டசுருதிப் பொருள்சோதித்தவாய்மனத்தொண்டருள்ளீர், சில்லாண்டிற்சிதையுஞ் சிலதேவர் சிறுநெறி சேராமே, வில்லாண்டகனகத் திரண்மேரு விடங்கன விடைப்பாகன், பல்லாண்டென்னும் பதங்கடந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

பாலுக்குப்பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடலீந்தபிரான் மாலுக்குச்சக்கர மன்றருள்செய்தவன் மன்னியதில்லைதன்னு ளாலிக்குமந்தணர் வாழ்கின்றசிற்றம்பலமே யிடமாகப் பாலித்துநட்டம் பயிலவல்லானுக்கே பல்லாண்டுகூறுதுமே.

குழலொலியாழொலிகூத்தொலியேத்தொலியெங்குங்குழாம்பெருகி, விழவொலி விண்ணளவுஞ் சென்றுவிம்மி மிகுதிருவாரூரின், மழவிடையார்க்கு வழிவழியாளாய் மணஞ்செய்குடிப்பிறந்த, பழவடியாரொடுங் கூடியெம்மானுக்கே பல்லாண்டுகூறுதுமே.

## பெரிய புராணம்.

உலகெலா முணர்ந்தோதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலிவேணியன்
அலகில்சோதிய னம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம்.

கற்பனைகடந்தசோதி கருணையேயுருவமாகி
யற்புதக்கோலநீடி யருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந் திருச்சிற்றம்பலத்துணின்று
பொற்புடனடஞ்செய்கின்ற பூங்கழல்போற்றிபோற்றி

தனிவெள்விடைமேனெடுவிசும்பிற்றலைவர்பூதகணநாதர் [ப
முனிவரமரர்விஞ்சையர்கண் முதலாயுள்ளோர்போற்றிசைப்
வினியகறியுந்திருவமுதமமைத்தார் காண வெழுந்தருளிப்
பனிவெண்டிங்கண் முடிதுளங்கப்பரந்தகருணைநோக்களித்
தார்.

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.